Regd. M. No. 6934 Phone No. 21841
# ஜனசக்தி
ஆசிரியர்: ப. ஜீவானந்தம் JANASAKTHI
(காலைப் பதிப்பு)



மலர் 15 இதழ் 329] சென்னை 16-7-59 விகாரி௵ ஆனி௴ 32உ வியாழக்கிழமை [4 பக்கங்கள் 7 காசுகள்

# மறுதேர்தல் என்பதல்ல பிரச்சினை

## மத்திய சர்க்காரில் உள்ள அதிகாரத்தை காங்கிரஸ் துர் உபயோகம் செய்ய விடுவதா?

### கேரள நிலைபற்றி தேசிய கவுன்சில் சர்ச்சை

### பி. ராமமூர்த்தி தகவல்

திருவனந்தபுரம், ஜூலை 15—

கேரளத்தில் மறு தேர்தல் கூடாது என்ற பொதுவான அபிப்பிராயம் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் தேசிய கவுன்சில் கூட்டத்தில் நிலவுகிறது என்று தோழர் பி. ராமமூர்த்தி பத்திரிகை நிருபர்களிடம் தெரிவித்தார். 13-7-59 முதல் தேசியக் கவுன்சில் கூட்டம் நடந்து வருகிறது.

நேற்று இரவும், இன்று காலையிலும் தேசியக் கவுன்சிலில் நடைபெற்ற விவாதத்தின் அடிப்படையில், ஒரு தீர்மானத்தை கட்சி கொள்கைகளை வகுக்கும் உயர்மட்ட ஸ்தாபனமான இக்கவுன்சில் தயாரிக்கும். இந்தத் தீர்மானம் இன்று மாலை நடைபெறும் கூட்டத்தில் சமர்ப்பிக்கப் படும் என்று அவர் தெரிவித்தார். மக்கள் ஆதரவு அந்தத் தீர்மானத்தில், கேரளத்தில் தற்போது ஏற்பட்டுள்ள நிலைமையில், கம்யூனிஸ்ட் கட்சி அனுசரித்து வந்துள்ள நடை முறைகளுக்கு ஆதரவாக பொதுமக்கள் ஆதரவைத் திரட்டுவதற்காக எடுக்கப்பட வேண்டிய நடவடிக்கை பற்றி கேரள சர்க்காருக்கும், இதர ராஜ்ய கம்யூனிஸ்ட் கட்சிகளுக்கும் வழி முறைகள் எடுத்துக் கூறப்படும் என்று தோழர் ராமமூர்த்தி கூறினர்.

**அனுமதிப்பதா?**

கேரளத்தில தற்போது ஏற்பட்டுள்ள முக்கிய பிரச்சினை என்னவெனில், கேரளத்தில் மறு தேர்தல் நடக்க வேண்டுமா இல்லையா என்பதல்ல. மத்திய அரசாங்கத்தில் ஆளும் கட்சியாக இருக்கிறது காங்கிரஸ் கட்சி ஆனல், கேரள ராஜ்யத்தில் அந்தக் கட்சி சிறுபான்மைக் கட்சியாகி விட்டது. மத்திய அரசாங்கத்தில் பதவியில் இருக்கும் காங்கிரஸ் கட்சி தனது அதிகாரத்தை ஆயுதமாக்கி ஜனநாயக பூர்வமாகத் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ள ராஜ்ய சர்க்காரை ஆட்சேபகரமான முறைகள் மூலம் அகற்ற முயலுவதை அனுமதிப்பதா என்பதே பிரச்சினை. இது குறித்துத் தீர்மானம் விளக்கம் தரும் என்று ராமமூர்த்தி மேலும் கூறினர்.

போன தடவை திருவனந்தபுரத்தில் நடந்த கம்யூனிஸ்ட கட்சியின் நிர்வாகக்குழு மறு தேர்தல் என்ற பிரச்சினையை நிராகரித்தது. அவ்வாறு மத்திய நிர்வாகக் குழு செய்தது சரி என்ற பொதுவான அபிப்பிராயமே தேசிய கவுன்சிலில் நிலவுகிறது என்றார் அவர்.

கேரள நிலைமை பற்றிய பரிசிலனை இன்று மாலையுடன் தேசிய கவுன்சில் கூட்டத்தில் பூர்த்தியாகும்.

### இராக்கில் தேர்தல்கள்

பாக்தாத், ஜூலை 15—

இராக்கில் அடுத்த ஆண்டில் சுதந்திரமான தேர்தல் நடைபெற்று தேசியக் கவுன்சில் தேர்ந்தெடுக்கப்படும் என்றும் சர்வ ஜன வாக்கெடுப்புக்குப் பிறகு ஒரு நிரந்தரமான அரசியல் சட்டம் தயாரிக்கப்படும் என்றும் தெரிகிறது. இந்தத் தகவலை இராக் பிரதமர் மேஜர் ஜெனரல் அப்துல் கரீம் காஸிம் வெளியிட்டார்.

### பிளவு என்ற பேச்சே இல்லை

**வி. ஆர். கிருஷ்ணய்யர் விளக்கம்**

ஹைதராபாத், ஜூலை 15—

கேரள மந்திரி சபையில் சுயேச்சையாக இருக்கும் மந்திரிகள் நடைமுறையில் எல்லாப் பிரச்சினைகளிலும் கம்யூனிஸ்ட் மந்திரிகளுடன் ஒரேவிதமான முடிவுகளை எடுத்துச் செயல் படுகின்றனர். மந்திரிகள் அனைவரின் கருத்துக்களும் இன்று ஒருமுகமாக உள்ளன என்று கேரள சட்ட மந்திரி வி. ஆர். கிருஷ்ணய்யர் கூறினர். மந்திரிகளிடை பிளவு என்ற பேச்சுக்கே இடமில்லை என்றார்.

கேரள சர்க்கார் மீது எமது குற்றப்பத்திரிகை இதோ!
சங்கர்

உலக அதிசயம்

### கேரளக் கிளர்ச்சி கூலிப்பட்டாளத்தின் வெத்து வேட்டுதான்!

**பிரிட்டிஷ் செய்தி நிருபர்கள் நேரில் கண்ட உண்மை**

சென்னை, ஜூலை 15—

"கேரளத்தில் நடைபெற்று வரும் எதிர்க்கட்சிகளின் கிளர்ச்சி கூலிப்பட்டாளத்தின் காலித்தனமே தவிர வெகுஜனக் கிளர்ச்சியல்ல கேரளத்தில் இந்தக் காலித்தனத்தை தவிர வேறு யெந்த புரட்சியும் கிடையாது"

இந்த அபிப்பிராயத்தை வெளியிட்டிருப்பவர்கள் கம்யூனிஸ்டுகளோ அல்லது அவர்களது அனுதாபிகளோ அல்ல! இன்னும் சொல்லப் போனல் கம்யூனிஸ்டுகளைக் கண்டாலே முகஞ்சுளிக்கும் பிரமுகர்கள்

லண்டனிலிருக்கும் ராய்ட்டர் செய்தி ஸ்தாபனத்தின் பிரதிநிதியும் பி. பி. ஸி. என்று சொல்லப் படுகிற பிரிட்டிஷ் ரேடியோ ஸ்தாபனப் பிரதிநிதியும் தான் வேலை கண்ட அபிப்பிராயத்தை வெளியிட்டனர்.

**நேரில் கண்டு முடிவு செய்தனர்**

இந்த இரண்டு பிரிட்டிஷ் செய்தி ஸ்தாபனங்களின் விசேஷ பிரதிநிதிகள் கேரளாவுக்கு விஜயம் செய்தனர்.

"விமோசன சமிதியின் போர் பாசறைகளுக்கு" இவர்கள் விஜயம் செய்தனர்.

கிளர்ச்சியில் சேர "தொண்டர் படை" கூலிக்காக திரட்டப்படுவதை இவர்கள் நேரில் கண்டனர். தண்ணீரைப் போல பணத்தை வாரி யிறைத்து 'மக்கள் கிளர்ச்சி' நடத்தப்படும் விநோதத்தை நேரில் கண்டனர்.

சென்னை திரும்பிய இந்தப் பிரதிநிதிகள் கன்னிமேரா ஹோட்டலில் சில தினங்கள் தங்கினர். அப்போதுதான் கேரளக் கிளர்ச்சி கூலிப் பட்டாளத்தின் வெறும் வெத்து வேட்டு தான் என்ற அபிப்பிராயத்தை அவர்கள் வெளியிட்டனர்.

### சர்வ கட்சித் தலைவர்கள் அறிக்கை

சென்னை, ஜூலை 15—

எக்ஸ்பிரஸ் பத்திரிகைகள் மீண்டும் திறக்கப்பட வேண்டும், சர்க்கார் அதற்காக எல்லா நடவடிக்கைகளையும் தாமதமில்லாமல் எடுக்க வேண்டும் என்று சர்வ கட்சித் தலைவர்கள் அறிக்கை நேற்று ஜனசக்தியில் வெளி வந்தது அல்லவா? அந்த அறிக்கையில் பின்கண்ட தலைவர்கள் கையொப்பமிட்டுள்ளனர்.

தோழர் பி. ராமமூர்த்தி (கம்யூனிஸ்டு) திரு. சி. என். அண்ணாதுரை (தி.மு.க.) திரு. ம. பொ. சிவஞான கிராமணியார் (தமிழரசுக் கழகம்) திரு. வி. கே. ராமசாமி முதலியார் (ஜனநாயக காங்கிரஸ்) திரு. எஸ். ஸி ஸி. அந்தோணிப் பிள்ளை (சோஷலிஸ்ட்) திருமதி எஸ். விஜயலட்சுமி (பிரஜா சோஷலிஸ்டு) திரு. டி. செங்கல்வராயன் (காங்கிரஸ்).

## கேரள பி. சோ.வைக் கண்டித்து 2 பி. சோ. எம். எல். ஏ.க்கள் ராஜிநாமா

### கட்சியே விண்டு போகிறது

லக்ஷ்மணபுரி, ஜூலை 14—

கேரள சர்க்கார் கொண்டு வந்துள்ள முற்போக்கான சட்டங்களுக்கு எதிராகவும், ஜனநாயக பூர்வமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட கம்யூனிஸ்ட் மந்திரி சபையைக் கவிழ்ப்பதற்காகவும் கேரளத்தில் பிற்போக்காளர்களும் ஜனநாயக விரோதிகளும் கிளர்ச்சி செய்து வருகிறார்களென்றும், அந்தப் பிற்போக்கான கிளர்ச்சியில் கேரள ராஜ்ய பி. சோ. கட்சியினரும் சேர்ந்திருப்பது கண்டு வெட்கமும் மன வேதனையும் அடைவதாகவும், ஆகவே, கேரள பி. சோ. கட்சியின் போக்கைக் கண்டிக்கும் முறையில் தான் பி. சோ. கட்சிக்கு தலை முழுக்குப் போட்டு ராஜிநாமா செய்வதாகவும் உத்தரப் பிரதேச பி சோ. கட்சி எம். எல். ஏ. திரு. சாம்பு தயாள் அறிக்கை விடுத்துள்ளார்.

**இன்னொரு பி. சோ. எம். எல். ஏ. யும் ராஜிநாமா**

உத்தரப் பிரதேசத்தைச் சேர்ந்த இன்னொரு பிரஜா சோஷலிஸ்ட் எம். எல். ஏ. யான திரு. பன்ஷிதார் சுக்லா ஒரு பொதுக் கூட்டத்தில் பேசுகையில், "கேரள பி சோ. கட்சியின் கம்யூனிஸ்ட் எதிர்ப்பு வெறியையும் கேரள சர்க்காரை அவர்கள் கண்மூடித்தனமாக எதிர்ப்பதையும் கண்டிக்கும் முறையில்" தான் பி சோ. கட்சியிலிருந்து ராஜிநாமா செய்யப் போவதாகத் தெரிவித்தார்.

**மற்றும் 4 தலைவர்கள்**

மீரத் ஜில்லா பி சோ. தலைவர்களான பிதாம்பூர் சாஸ்திரி பேராசிரியர் மூல்சந்த், ஜகமோகன் சிங் சாஸ்திரி, குருசரண் ஆகிய நால்வரும் அகில இந்திய பி சோ. பொதுக்காரியதரிசியான திரிலோக்சிங்குக்கு கடிதம் எழுதியிருக்கிறார்கள். அதில், "கேரள பி. சோ. கட்சி பகிரங்கமாக காங்கிரஸுடனும் வகுப்புவாதிகளுடனும் சேர்ந்து கிளர்ச்சி நடத்துவது சட்டத்துக்கும் ஜனநாயகத்துக்கும் விரோதமானதென்றும், இதனால் ஜனநாயகத்தின் மீது மக்களுக்குள்ள நம்பிக்கையை உடைப்பதாக முடியுமென்றும், தேர்தலில் தோற்றுப்போன கட்சி அடுத்த பொதுத் தேர்தல் வரை காத்திருக்காமல் இடைத் தேர்தல் கோரி நேரடி நடவடிக்கையில் இறங்குவது, கம்யூனிஸ்டுகளை ஆட்சி பீடத்திலமர்த்திய பெரும் பகுதி மக்களை அவமதிப்பதாகுமென்றும், இதனால் தடியெடுத்தவனெல்லாம் தண்டல் காரனுகி விடுவானே தவிர, ஜனநாயகம் நிலைகொள்ள முடியாதென்றும், கேரள பி. சோ. தலைவர்கள் தம் சொந்த சுயநலம் கருதியே சோஷலிஸ்ட் கொள்கைகளைக் காற்றில் பறக்கவிட்டு விட்டு காங்கிரஸுடன் கைகோர்த்து நிற்கிறார்களென்றும்" குற்றம் சாட்டியுள்ளார்கள்.

**கட்சி விண்டுபோகும்**

அக்கடிதத்தில் ஓர் எச்சரிக்கையும் கொடுக்கப்பட்டிருக்கிறது அதாவது, "கேரளப் பிரச்சினையில் பி. சோ. கட்சி நடந்து கொள்ளும் முறையால், விபரீத விளைவுகளே ஏற்படும். பி.சோ. ஊழியர்களிடையே சீர்குலைவு ஏற்படும் இரு முகாம்களாக பி.சோ. கட்சி பிளந்து போகும், பி.சோ. கட்சியின் அனுதாபிகள் பலர் தம் அனுதாபத்தை வாபஸ் வாங்கிக் கொள்ளுவார்கள்" என்று எச்சரிக்கப்பட்டுள்ளது. மற்றும் திரு. சாஸ்திரி விளக்குகையில், "மீரத்திலிருந்து கேரளப் போராட்டத்தில் குதிக்க 100 தொண்டர்கள் போகப் போவதாக பத்திரிகைகளில் படித்தோம். மீரத் பி.சோ. யூனிட்டில் அப்படிப்பட்ட தீர்மானமொன்றும் எடுக்கவில்லை. ஜெயிலுக்குப் போவதில் சுகம் கண்ட சில சிறைப் பட்சிகள் அப்படிச் சொல்லி யிருக்கலாம்" என்றார்.

நைனிடால், முஜாபர் நகர் ஆகிய நகரங்களிலும் பல பி.சோ ஊழியர்கள் கேரளப் பிரச்சினையில் ராஜிநாமா செய்திருப்பதாக தகவல் கிடைத்திருக்கிறது. (ஐ.பி.ஏ.)

### சட்டசபைக் கூட்டம் அடுத்த மாதம் ஆரம்பம்

சென்னை, ஜூலை 15—

சென்னை சட்டசபையின் அடுத்த கூட்டம் ஆகஸ்ட் மாதம் 31-ம் தேதி ஆரம்பமாகும் என்று அறிவிக்கப்படுகிறது.

இந்தக் கூட்டத்தில் சென்னை விவசாய மசோதா உறவு கொண்டுவரப்படலாம் எனத் தெரிகிறது.



## அமெரிக்காவில் 5 லட்சம் எஃகு தொழிலாளர் வேலை நிறுத்தம்

### தொழிலே ஸ்தம்பித்து விட்டது

நியூயார்க், ஜூலை 15—

அமெரிக்காவில் எஃகுத் தொழிற்சாலைகளில் வேலை செய்துவரும் 5 லட்சம் தொழிலாளர்கள் ஒரு பிரம்மாண்டமான வேலை நிறுத்தத்தில் இறங்கியுள்ளனர். இதன் பெயரால் அமெரிக்க குபேர முதலாளிகள் எஃகுத் தொழிற்சாலைகளை மூடிவிட்டனர் அமெரிக்காவின் செல்வம் கொழிக்கச் செய்யும் மூலாதாரத் தொழில் எஃகுத் தொழில். இது இன்று பூரணமாக ஸ்தம்பித்து விட்டது.

தொழிலாளர் பிரதிநிதிகளும் தொழிலதிபர் பிரதிநிதிகளும் நடத்திய பேச்சுவார்த்தைகள் முடிவடைந்ததால் வேலை நிறுத்தம் வெடித்துள்ளது. முதலாளிகளின் கொடாக் கொண்டத்தனத்தைத் தொழிலாளர்கள் கண்டிக்கிறார்கள்.

தொழிலாளர் சங்கம் மணிக்கு 15 செண்ட் (சுமார் 65 நயா பைசா) சம்பளம் உயர்வு கொடுக்க வேண்டும் என்று கோரியுள்ளது. இது தவிர, தொழிலாளர் க்ஷேம நலத் திட்டப்படி சலுகைகள் கோரியுள்ளது. இந்தச் சலுகைகளைக் கொடுத்தால எஃகு விலை மிகமிக ஏறிப்போகும் என்பது முதலாளிகள் வாதம். தொழிலாளர்கள் வேறு வழியின்றி போராட்டத்தில் குதித்து விட்டனர்.

### நியூயார்க்கில் இந்திய உதவி ஜனாதிபதி

நியூயார்க ஜூலை 15—

இந்திய உதவி ஜனாதிபதி டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன் நேற்று அமெரிக்காவில் லாஸ் ஏஞ்ஜல்ஸ் நகரத்திலிருந்து நியூயார்க் வந்து சேர்ந்தார். அவர் இங்கு 3 நாட்கள் தங்கியிருப்பார்.

விமான நிலையத்தில், ஐ. நா.விலுள்ள பிரதம இந்தியப் பிரதிநிதி திரு. சி.எஸ். ஜா., கான்ஸல் ஜெனரல் கோபாலமேனன், இந்திய மாணவர் சங்கத்தின் பிரதிநிதிகள் ஆகியோர் வரவேற்றனர்.

**கடைசிச் செய்தி**

### புதுவையில் போட்டியிடுவோர்

புதுவை, ஜூலை 15—

இன்றுதான் புதுவை ராஜ்ய அசெம்பிளி தேர்தலுக்கு அபேட்சா பத்திரம் தாக்கல் செய்யும் நாள்.

புதுவைப் பகுதிக்கு உள்ள 24 ஸ்தானங்களில் 24-க்கும் காங்கிரஸ் போட்டியிடுகிறது. மக்கள் முன்னணி 22-க்கு போட்டியிடுகிறது. 74 சுயேச்சைகளும், தி. மு. க. சார்பில் 20 அபேட்சகர்களும் நாமினேஷன் தாக்கல் செய்திருக்கிறார்கள்.

ஆகஸ்டு 11-ல் தேர்தல். ஓட்டு எண்ணப்படும் தேதி ஆகஸ்டு 19-ல் ஆரம்பிக்கும்.

## கேரள சர்க்கார் உடனடி ராஜிநாமாச் செய்ய வேண்டுமாம்

### கம்யூனிஸ்டல்லாத சட்ட மன்ற உறுப்பினரின் பழைய பல்லவி!

திருவனந்தபுரம், ஜூலை 15—

கேரள ராஜ்யத்தின் கம்யூனிஸ்ட் அல்லாத சட்ட சபை உறுப்பினர்கள், ஸ்தல ஸ்தாபன உறுப்பினர்கள் ஆகியவர்கள் அடங்கிய கூட்டம் இன்று நடைபெற்றது. கம்யூனிஸ்ட் மந்திரி சபை உடனே ராஜிநாமாச் செய்ய வேண்டுமென்றும், உடனடியாக தேர்தல் சுதந்திரமான சூழ்நிலையில் நடத்தப்பட வேண்டும் என்றும், அக் கூட்டம் தீர்மானம் நிறைவேற்றியுள்ளது.

கம்யூனிஸ்ட் அல்லாத பார்லிமெண்ட் உறுப்பினர்களும் இக் கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

இன்று நடைபெற்ற இந்த ரகஸ்யக் கூட்டத்தில் நாட்டின் பெரும்பான்மையான மக்களின் நம்பிக்கையை கேரள அரசாங்கம் இழந்து விட்டதென்றும், ஆணையை மீறி நடக்கின்றனர் என்றும் நிர்வாகத்தை மக்களின் பொது வான நன்மைக்கு அல்லாமல் தங்களது கட்சியின் நலனுக்குப் பயன்படுத்துகின்றனர் என்றும், ராஜ்யத்தில் சட்டமும் ஒழுங்கும் நிலை குலைந்து போய்விட்டது என்றும், யிருக்கும் உடைமைக்கும் பாதுகாப்பில்லை என்றும், அரசாங்கம் அரசியல் சட்ட விதிகளுக்குட்பட்டு நடக்கவில்லை என்றும், மாறாக அரசியல் சட்டத்தை நாசம் செய்யும் முறையில் நடைபெறுகிறது என்றும் குற்றம் சாட்டப் பட்டது.

## பள்ளிகள், ஆஸ்பத்திரிகளில் வேலைநிறுத்தம், கதவடைப்புக்குத் தடை

### மேற்கு வங்க சர்க்காரின் புதிய மசோதா பிரசுரம்

கல்கத்தா, ஜூலை 14—

பள்ளிகள், கல்லூரிகள், ஆஸ்பத்திரிகள் முதலிய ஸ்தாபனங்களில் வேலைநிறுத்தங்களையும், கதவடைப்புகளையும் தடை செய்யும் மசோதா ஒன்றை மேற்கு வங்க அரசாங்கம் கல்கத்தா கெஜட்டில் பிரசுரித்திருக்கிறது.

மேற்கு வங்க சட்டசபையின் அடுத்த கூட்டத்தில் இம் மசோதா கொண்டுவரப்பட விருக்கிறது.

இந்தியத் தொழிற்சங்கங்கள் சட்டம், தொழில் தகராறு சட்டம் ஆகியவை சமூக நல ஸ்தாபனங்களுக்குச் செல்லுபடியாகாது எனவும் இத்தகைய ஸ்தாபனங்களில் எழும் தகராறை டிரிபூனல் மூலம் தீர்க்கலாம் எனவும் மசோதாவில் கூறுகிறது.

## 8 லட்சம் மக்கள் அகதிகளாக்கப்பட்டனர்

### காஷ்மீர் வெள்ளப்பெருக்கின் கொடுமை

ஸ்ரீநகர், ஜூலை 14—

காஷ்மீரில் ஏற்பட்ட வெள்ளப்பெருக்கு காரணமாக 8 லட்சத்திற்கதிகம் மக்கள் வீடிழந்து அகதிகளாக்கப்பட்டனர். காஷ்மீர் பிரதமர் பக்ஷி குலாம் முகமது பத்திரிகை நிருபர்களிடம் இன்று இத்தகவலை வெளியிட்டார்.

இந்த மக்களுக்கு வேலை கொடுத்து தினக்கூலி வழங்குவது பற்றி சர்க்கார் யோசனை செய்து வருகிறது என்றார் இந்த மக்களுக்கு உதவி செய்யும் முறையில் மதில்கள் கட்டுவது, பாதைகள் போடுவது போன்ற வேலைகள் உடனடியாக தொடங்கப்படும். உணவுதானியம், துணிமணி, மருந்துகள் ஆகியவை சம்பளத்தின் ஒரு பகுதியாக வழங்கப்படும்.

## 22,000 ஹார்வி மில் தொழிலாளர்கள் பட்டினி

### வெள்ளை முதலாளியின் கதவடைப்பு இன்று 60-வது நாள்

**முதலாளியின் பிடிவாதம் இறங்க இன்னும் எத்தனை நாள்?**

### மக்கள் முன்னணி ஜெயபேரிகை முழங்க புதுவைக்கு நிதி தாரீர்!

- ★ காங்கிரஸின் ஊழலாட்சி ஒழிய
- ★ குபேர் கும்பலின் அக்ரமங்களுக்கு முடிவு காண
- ★ மக்கள் நலனை பாதுகாக்க
- ★ மக்கள் முன்னணி ஜெயபேரிகை கொட்ட
- ★ மாற்று சர்க்கார் புதுவையில் மலர
- ★ தாமதமின்றி நிதி தாரீர்!
- ★ கம்யூனிஸ்டு கட்சியின் ஒவ்வொரு கிளையும் ரூ 5 அனுப்பிவிட்டதா?
- ★ இன்றேல் இன்றே, இப்பொழுதே அனுப்புக! நமது அபேட்சகர்கள் தேர்தல் களத்தில் குதித்து விட்டார்கள்.
- ★ தேர்தல் வேலைகள் தீவிரமடைய உடனடியாக உதவுக!

அனுப்ப வேண்டிய விலாசம்:
வி. பி. சிந்தன்,
கம்யூனிஸ்டு கட்சி ஆபீஸ்
7, வெள்ளாளத் தெரு, புதுவை,

ஜனசக்தி

சென்னை 16-7-1959

# இந்தோனீசியாவில் மாறுதல்

இந்தோனீசிய ஜனதிபதி சுகார்ணோ 1945-ம் வருஷத்திய அரசியல் சட்டத்தை மீண்டும் பிரகடனம் செய்துள்ளார். இதன் அடிப்படையில் புதிய மந்திரி சபையும் நியமிக்கப்பட்டுள்ளது. இதிலுள்ளவர்கள் எந்தக் கட்சியையும் சார்ந்தவர்களல்ல. ஒரு அரசியல் கட்சியில் உறுப்பினராக இருந்தால் தனது உறுப்பினர் பொறுப்பை அவர் ராஜிநாமாச் செய்து விடுவார்.

இந்த மந்திரிசபைக்கு ஜனதிபதி சுகார்ணோவே பிரதம மந்திரியாக இருப்பார்.

புதிய மந்திரி சபை சீக்கிரமே ஒருமக்கள் ஆலோசனை சபையை (சட்டசபை) உருவாக்கும். அத்துடன் மந்திரி சபைக்கு நேரடியாக ஆலோசனை கூற சுப்ரீம் அட்வைசரி கவுன்சில் ஒன்றும் நியமிக்கப்படும்.

முன்னுள் சட்டசபையிலிருந்தும், தொழில், தொழிலாளர், விவசாயிகள், நடுத்தர்ப் பகுதியினர் முதலிய சமூகப் பிரிவுகளிலிருந்தும் நபர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு மேற்கூறிய ஆலோசனை சட்டசபையும், சுப்ரீம் கவுன்சிலும் அமைக்கப்படும்.

இவ்வாறு உருவாக்கப்படும் அரசியல் அமைப்பை நம் நாட்டிலுள்ள சில பத்திரிகைகள் இந்தோனீசியாவில் ஜனநாயகம் மறைந்து விட்டதாகவும் சுகர்ணோவும், ராணுவமும் சேர்ந்து கொண்டு நடத்தும் சர்வாதிகாரம் உதயமாகி விட்டதாகவும் விமர்சனம் செய்துள்ளன!

இந்தோனேசியாவின் பழைய எஜமானரான டச்சு ஏகாதிபத்தியவாதிகளும் அவர்கள் இருந்த இடத்தில் இன்று புகுந்து கொள்ள யத்தனிக்கும் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளும் அவர்களது ஏடுகளும் இந்தோனீசியாவில் ஏற்பட்டுள்ள மாறுதல்களை இதே விதத்தில் தான் விமர்சிக்கிறார்கள். அங்கு ஜனநாயகம் அஸ்தமித்து விட்டதாக அலறுகிறார்கள்.

பாகிஸ்தானிலும், பர்மாவிலும், தாய்லாந்திலும் ராணுவ சர்வாதிகாரம் ஏற்பட சதி செய்த மேற்கத்திய ஏகாதிபத்தியவாதிகள் இந்தோனீசிய மாறுதலைக் கண்டு கூக்குரலிடுவதற்குக் காரணமுண்டு.

எகிப்தில் தளபதி நாசர் ஆட்சியைப் பொறுத்துக் கொள்ளத் தயாராக இருக்கும் அவர்கள், இராக்கில் தளபதி காசிம் ஆட்சியை எதிர்க்கிறார்கள். காரணம் உண்டு. இராக்கில் ஏகாதிபத்திய எதிர்ப்பு, ஜனநாயக மலர்ச்சியும் இணைந்து செல்லும் சூழ்நிலை ஏற்பட்டுள்ளது.

இந்தோனேசியாவின் சூழ்நிலை வேறுபடினும், இன்று ஆட்சிபீடத்திலுள்ளவர்கள் ஏகாதிபத்திய எதிர்ப்பாளர்களாகவும், புதிய தலைமைக்குப் பின்பலமாகவும் இருப்பவர்கள் ஏகாதிபத்தியத்தை எதிர்க்கக் கூடியவர்கள்.

இதுவரையில் டச்சு ஏகாதிபத்தியத்துக்குச் சொந்தமான 314 தொழில் நிறுவனங்களை தேசியமயமாக்கியுள்ளது இந்தோனேசிய சர்க்கார்.

சுமத்திராவிலிருந்து ஏகாதிபத்தியக் கைக்கூலிகளின் பிரிவினைக் கிளர்ச்சியை அடக்கி ஒடுக்கியிருக்கிறது இந்தோனேசிய சர்க்கார்.

இந்தக் கலககாரர்கள் இந்தோனேசியாவைச் சேர்ந்த இரண்டாயிரத்திற்கு மேற்பட்ட தீவுகளில் இன்னும் செயல்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கும் அமெரிக்க டச்சு ஏகாதிபத்தியவாதிகளுக்கும் தொடர்புண்டு. பிலிப்பைன்ஸ், மேற்கு இரியன், சிங்கப்பூர் போன்ற அருகாமையிலுள்ள பிரதேசங்களிலிருந்து இந்தக் கலககாரர்களுக்கு யுத்த ஆயுதங்கள் போன்ற பலதரப்பட்ட உதவிகள் தரப்படுகின்றன.

இவ்வாறு இந்தோனேசியாவை ஒரு ஏகாதிபத்தியச் சுரண்டல் காடாக மாற்ற மஜ்ஜூமி போன்ற

பிடித்த ஸ்தாபனங்களை ஏகாதிபத்தியவாதிகள் பயன்படுத்தி வருகின்றனர்.

மறைமுகமாக தாருல் இஸ்லாம் ஆயுதம் தாங்கி காடுகளில் ஒளிந்து கொண்டு கலகம் செய்கிறது. வெளிப்படையாக மஜ்ஜூமி என்ற வகுப்புவாத அரசியல் கட்சி சட்டபூர்வமாக இயங்கிக் கொண்டே இந்தோனீசியாவின் அரசியலில் குழப்பமும், ஸ்தம்பிப்பும் ஏற்படுத்தியே வந்தது. இந்தோனீசியாவின் சுதந்திரத்திற்கு எதிராகவே நடைமுறையில் செயல்பட்டது. இதனுடன் நாதேதுல் உலிமா என்ற மற்றொரு முஸ்லீம் கட்சியும் சேர்ந்து கொண்டதால் தேர்ந்தெடுக்கப்பட்ட பார்லிமெண்டில் தேசிய சுதந்திரத்தைப் பாதுகாக்கும் உறுதியான நடவடிக்கைகள் விரைவில் எடுத்து அரசாங்கம் செயல்பட முடியாமல் சக்தியற்றிருந்தது.

இத்தகைய சூழ்நிலையில்தான் ஏகாதிபத்தியவாதிகளின் தலையீடுகளை முறியடிக்கவும், நாளுக்கு நாள் மோசமாகி வரும் பொருளாதார நெருக்கடியைச் சமாளிக்கவும் வேறு முறைகளைக் கையாள வேண்டிய அவசியமேற்பட்டது. ஏகாதிபத்தியத் தலையீடு; பயமுறுத்தல், சூழ்நிலையில் இந்த மாறுதல்கள் செய்யப்பட்டுள்ளன என்பதை மறந்து விடக் கூடாது. அதனால்தான் இந்தோனீசியாவிலுள்ள மிகப் பெரும் அரசியல் கட்சிகளான கம்யூனிஸ்டுக் கட்சியும், தேசியக் கட்சியும் இந்த மாறுதல்களை வரவேற்கின்றன.

புதிய அரசியல் மாறுதல் நாட்டிலுள்ள அரசியல் கருத்துக்களையோ அல்லது ஸ்தாபனங்களையோ தடை செய்யவில்லை மாறாக தேச சுதந்திரத்தை ஏகாதிபத்திய வல்லூறுகளிடமிருந்து பாதுகாத்து, மத சார்பற்ற ஜனநாயக வாழ்வை உருவாக்கவும், ஏகாதிபத்தியவாதிகளின் தடைகள் காரணமாக ஏற்பட்டுள்ள பொருளாதார நெருக்கடியைச் சமாளிக்கவுமே இந்த மாறுதல்கள் செய்யப்பட்டுள்ளன என்பதை உணர்தல் வேண்டும்.

# “சுதந்திரா” கட்சியின் லட்சியம் என்ன?

ஏ. எஸ். கே. அய்யங்கார்
(இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி, தமிழ்நாடு நிர்வாகக் குழு உறுப்பினர்)

*

காங்கிரசின் செல்வாக்கு சிதைந்து வருவதைப் பார்த்து இப்பகைப்புலனில் ஒரு 'கன்சர்வேடிவ்' கட்சியை ஸ்தாபித்து தனவந்தர்களின் தனி உடைமைக்கு அரண் ஆக்கும் திருப்பணியில் ராஜாஜி தன் இறுதி காலத்தைச் செலுத்த முன்வந்துள்ளார்.

வர்க்கப் போராட்டத்தைத் தடுக்கவேண்டும் என்பது இக்கட்சியின் பிரதான லட்சியமாம். வர்க்கப் போராட்டம் எவ்வாறு நடைபெறுகிறது. அது எப்படி சமுதாயப் பரிணாம வளர்ச்சியின் தூண்டுகோலாக இருந்து வருகிறது என்ற விஷயங்களை ஏற்கனவே கூறியுள்ளோம். ஆகவே, வர்க்கப் போராட்டத்தைத் தவிர்ப்பது என்ற திருப்பணியில் ராஜாஜி அவர்களைச் சூழ்ந்து நிற்கும் மசானி, ரங்கா கோஷ்டிகளுடைய குறிக்கோள் என்ன? நிலச்சுவான்தார்களின் நிலஉடைமையைப் பேணிக் காப்பதேயாகும். எனவேதான் காங்கிரசின் நாகபுரி தீர்மானத்தைக் கூட எதிர்க்கின்றனர், பல்வேறு போர்வையில் வந்தபோதிலும் இவ்வாறு எதிர்க்கக்கூடியவர்கள் நிலச்சுவான்தார்களின் உரிமைகளைக் காப்பாற்றவே நிற்கின்றனர் என்பதில் சந்தேகமில்லை.

வெள்ளையன் நீண்ட நாள் சுரண்டல் ஆட்சி கடிந்தொழிந்தது. ஆனால் சுமார் 250 ஆண்டுகள் நம்நாட்டை சொல்லொண்ணுக் கஷ்டங்களுக்கும், வறுமை, பசி, பட்டினியில் கோடிக்கணக்கான நம் மக்களை வதைத்தனர். எல்லையற்ற சுரண்டலே வெள்ளையனின் கொடுங்கோல் ஆட்சியாக இருந்தது.

வங்காளத்தில் இறுதியாக இருந்த இந்திய அரசன் 1764-65ல் ரூ. 1,26,21,000 நிலவரி வசூலித்தான் ஆனால் வெள்ளையன ஆட்சியில் லார்ட் காரன்வாலிஸ் 1793ல் “பர்மனென்ட் செட்டில்மெண்ட்” (Permanent Settlement)டின் கீழ் ரூ 4,42,00,00 ஆக்கிவிட்டான். இவ்வாறு பாதிக்கப்பட்ட வங்காளத்தில் பஞ்சம் ஏற்பட்டதென்றால் என்ன ஆச்சரியம்! ஒரு கோடி மக்கள் வங்காளத்தில் அக்காலத்தில் ஏற்பட்ட பஞ்சத்தால் மாண்டனர்.

ஜமீன்தார் முறையை ஏற்படுத்தி உழவனை மிருக ராசிகளில சேர்த்தான் வெள்ளையன் இந்த முறையின் பல அம்சங்கள் இன்றும் நீடித்து வருகின்றன.

இந்தியாவை தன் மார்க்கெட்டாக ஏற்படுத்திக்கொண்டது மட்டுமில்லாமல், இங்கிருந்து மூலப் பொருள்களையும் வெள்ளையன் தன் இஷ்டம்போல் எடுத்துச் சென்றான். தன் நலனை உத்தேசித்து ரயில் பாதையைப் போட்டான். இதன் தன்மையைப் பற்றி மார்க்ஸ் பின்வருமாறு விளக்குகிறார்:

“தங்கள் உற்பத்திக்குத்தேவையான பருத்தி, ஏனைய மூலப் பொருள்களையும் குறைந்த செலவில் கொள்முதல் செய்து எடுத்துச் செல்ல வேண்டும் என்ற ஒரே சுயநலக் கண்ணோட்டத்துடன்தான் இங்கிலீஷ் மில் முதலாளிகள் இந்தியாவில் ரயில் பாதையைப் போட்டார்கள் என்பதை நான் உணர்வேன். ஆனால் இரும்பும் நிலக்கரியும் உள்ள ஒரு நாட்டில் இயந்திரத்தைப் புகுத்தினால், அது வளர்ச்சி அடைந்து கொண்டே போவதை யாராலும் தடுக்க முடியாது என்பது உண்மை... இந்தியாவில் ரயில் முறையானது நவீனதொழிலியல் வளர்ச்சியின் முன்னோடி தான் என்பதில் ஐயமில்லை. ரயில் முறையால்வரும் நவீனத் தொழிலியல் வளர்ச்சி இந்திய ஜாதிப் பாகுபாடுகளுக்கு அஸ்திவாரமாக உள்ள வாழையடி வாழையாக வந்துள்ள வேலைப் பிரிவு முறைகளை தகர்த்தெறியும் இந்த ஜாதிப் பாகுபாடுகள் இந்திய முன்னேற்றத்திற்கும், இந்தியா வல்லரசாகத் திகழவும் தடங்கலாக நிற்கும் நந்திகள்”

இவ்வாறு மிகத் தெளிவாக கம்யூனிஸத்தின் தந்தையாகிய காரல் மார்க்ஸ் இந்தியாவைப் பற்றி கூறுகிறார்.

நிற்க, வெள்ளையன் ஆட்சி கடிந்தொழிந்ததும், பொருளாதார விடுதலை பெற்றுவிட்டோம் என்று கூறமுடியாது. நாட்டில் 'கலோனியல்' பொருளாதார அமைப்புதான் நீடித்து வந்துள்ளது. எனவேதான், உணவு நெருக்கடி என்ற மானக்கேடான நிலை. பிரதானமாக, விவசாயத்தின் மீது ஆதாரப்பட்டிருக்கும் நாட்டில் இந்த அவநிலை.

அணுவைத் துளைத்து அதிலுள்ள அதிசயங்களைக் கண்டுபிடித்து மின்னல் வேகத்தில் மாறிக்கொண்டே போகும் உலகில் நம்நாடும் பின்தங்கி இருக்கலாகாது. ஆனால், வெள்ளையன் விட்டுச்சென்ற வினையை, நாம் விரைவில் விரட்டவேண்டும்.

## திட்டமிட்ட மாறுதல்

இதைச் செய்வதெப்படி? பல ஐந்தாண்டு திட்டங்களின் மூலம் நாடு நலம்பெற, மக்கள் நல்வாழ்வு வாழ, வழிகோலவேண்டும். அதிவிரைவில் நாடு தொழில் மயமாக்கப் படவேண்டும். ஆனால் நம் நாட்டின் பொருளாதார அமைப்போ நில பிரபுத்துவ—பண்ணையாள் முறையாக இருக்கின்றது தொழிலியல் வளர்ச்சிக்குப் புரட்சிகரமான மாறுதல் தேவை.

1793-ல் பிரஞ்சு தேசத்தில் மிகப்பெரிய புரட்சி ஏற்பட்டது “சுதந்திரம்! சமத்துவம்! சகோதரத்துவம்!” என்ற முப்பெரும் கோஷங்களைப் பதாகையாகக் கொண்டு பிரஞ்சு மக்கள் இப்புரட்சியைச் செய்தனர்.

பண்ணையாள் முறையை ஒழிக்கவில்லை என்றால் தொழில் வளர்ச்சி பகற்கனவே!

எட்மண்ட் பர்க் (Edmund Burke) என்ற ஆங்கிலேய எழுத்தாளர் பிரஞ்சு புரட்சியைக் கண்டித்து. ‘பழையன பாழாய் விட்டனவே!’ என்று கண்ணீர் வடித்தான்.

டாம் பெய்ன் என்ற அறிஞர் “மனிதனின் உரிமைகள்” (Rights of Man) என்ற நூலை இயற்றி, எட்மண்ட் பர்க்கிற்கு சூடான பதிலைக் கொடுத்தார்

ராஜாஜி இன்று ‘பழையன பாழாய்விடுமே!’ என்று கதறுகிறார். ‘ஆம்! ஆம்!’ என்று நிலச்சுவான்தார்கள், ராஜாஜி பஜனை செய்யத் தொடங்கிவிட்டனர்.

## ராஜாஜியை வாழ்த்துபவர்கள்

நிலச்சொந்தக்காரர்கள் மட்டுமல்ல. பல முதலாளிகளும் ராஜாஜியை வாழ்த்துகின்றனர் ராஜாஜி கம்யூனிஸத்தைபலமாக எதிர்க்கிறார் ஆகவே பலஅமெரிக்க பத்திரிகைகளும் வானளாவப் புகழ் பாட்டுபாடுகின்றன. சமீபத்தில் ஏ.டி. ஷராப் திருவாய் மலர்ந்துள்ளார் “அடுத்த 6, 7 வருடங்களுக்குள் இந்தியா வலதுசாரியாக மாறிவிடும். ஆகவே, அமெரிக்க முதலாளிகளே, வாரீர்! நாங்கள் உங்கள் சகாக்கள். நீங்களும் நாங்களும் சேர்ந்து கம்யூனிஸத்தை எதிர்ப்போம்!”

ரிசர்வ் பாங்கு மாஜி கவர்னர் பெனிகல் ராமா ராவ், ஒரு முதலாளியும்கூட. அவரும் திருவாய் மலர்ந்துள்ளார் ‘ஸ்வதந்திரா’ கட்சியை வரவேற்கின்றார். எம். எஸ். ஆனே அவர்கள் மிகத் தெளிவாகக் கூறுகிறார்: கம்யூனிஸத்திற்கு நல்லதோர் மருந்து ஸ்வதந்திரா கட்சி! காங்கிரஸ் தோற்றது என்றால் கம்யூனிஸத்தைத்தான் மக்கள் ஆதரிப்பார்கள்.

இது ஒரு பெரிய அபாயம். ஆகவே ராஜாஜி வாழ்க!

காங்கிரஸ் தலைவரும், மத்திய மந்திரியுமாகிய கே. டி. மாளவையா அவர்கள் கூறுவதாவது: “ராஜாஜியைவிட கம்யூனிஸத்தையே மக்கள் விரும்புவார்கள்!” என்று நாகபுரி தீர்மானத்தை ஆதரிக்கிறார்.

மான்செஸ்டர் கார்டியன் பத்திரிகை மிக்க வருத்தத்துடன் எழுதுகிறது. “நீடித்து இருந்தால், ராஜாஜியின் கட்சிக்கும் ஒரு காலம் வரும்!”

பண்டித நேரு ராஜாஜியின் ஸ்வதந்திரா கட்சியை வரவேற்று, ஆனால் நாகபுரி தீர்மானத்தை இக்கட்சி ஒன்றும் செய்யமுடியாது என்று கூறுகிறார்.

நல்லதோர் சர்க்கஸ் நடைபெறுகிறது. நிலப்பிரபுத்துவ முறையை ஒழித்து முதலாளித்துவம் வளரவேண்டும். ஆனால் நிலப்பிரபுக்களும்—முதலாளிகளும் கூட்டு சேர்ந்துள்ளனர். உண்மையில் இவர்கள் எதிர்ப்பது நாகபுரி தீர்மானத்தையோ, அல்லது பொதுத்துறையையோ மட்டுமல்ல—இருவருக்கும் எமனாக இருக்கும் கம்யூனிஸ்ட் கட்சியை எதிர்க்கின்றனர்.

“வசை ஒழிய வாழ்வாரே
வாழ்வார் இசையொழிய
வாழ்வாரே வாழாதவர்”
—(குறள் 240)

(முற்றும்)

# மக்கள் சீனத்திற்கு ஐ. நா.வில் பிரதிநிதித்துவம் வேண்டும்

## ஐ.நா. பொதுச்சபையின் அடுத்த கூட்டத்தில் முடிவு காண்பது அவசியம்

### இந்தியாவின் முயற்சி

நியூயார்க், ஜுலை 14—

ஐ.நா.வில் மக்கள் சீன பிரதிநிதித்துவம் பெறவேண்டுமென்ற பிரச்சினை ஐ. நா. பொதுச்சபையின் அடுத்த கூட்டம் நிகழ்ச்சி நிரலில் சேர்க்கப்படவேண்டுமென்று இந்தியா இன்று ஒரு மகஜரை ஐ. நா. பொதுச் செயலாளருக்குச் சமர்ப்பித்திருக்கிறது.

இந்திய பிரதிநிதி சி. எஸ். ஜா அனுப்பிய மகஜரில் வாசகம் வருமாறு: உலகிலேயே பெரும்பாலான சர்க்காரை ஐ. நா.வில் பிரதிநிதித்துவம் பெற்றுள்ளன. ஐ. நா.வில் பிரதிநிதித்துவம் பெற சீன மக்களுக்கு சட்டபூர்வமாக உரிமைகள் உண்டு. ஐ. நா. ஸ்தாபனம் பூரண தகுதி பெற வேண்டுமானால் சீனவுக்குப் பிரதிநிதித்துவம் அவசியம். ஆகவே இது ஐ. நா. வில் சீனவுக்குப் பிரதிநிதித்துவம் வழங்கவேண்டிய பிரச்சினையை விவாதிக்கவேண்டுவது அவசியமாகும்.

சீனவை முறையாக ஆலோசனை செய்யாமலும், அங்கீகாரமின்றி ஒத்துழைப்பில்லாமலும் சமாதானம், பஞ்சசீல திட்டங்கள் வெற்றிகரமாக நிறைவேறவே முடியாது.

#### உண்மையான பிரதிநிதிகள் இல்லை

ஐ. நா. நடவடிக்கைகளில் இன்று சீனவுக்கு முக்கிய ஸ்தானம் உண்டு. அதனைக் கருதியே ஐ. நா. பாதுகாப்பு சபையில் சீன ஒரு சாசுவதமான உறுப்பு ஆக்கப்பட்டது. ஆனால் சீனவின் உண்மையான பிரதிநிதிகள் ஐ. நா. வில் கலந்துகொள்ளாமலிருப்பது துரதிருஷ்டமாகும்.

ஐ. நா. பொதுச்சபை தனது அடுத்த கூட்டத்தில் இந்தப் பிரச்சினையை நன்கு பரிசீலனை செய்து, மக்கள் சீனவின் பிரதிநிதித்துவம் பெற சம்மதிக்கும் என்று இந்திய சர்க்கார் நம்புகிறது.

#### மேலை நாடுகளுக்கு ஏமாற்றமாம்

மக்கள் சீன சார்பில் இந்தியா இவ்வித முயற்சி எடுத்தது மேலைநாடுகளின் வட்டாரங்களில் பெரும் ஏமாற்றத்தை உண்டு பண்ணியிருக்கிறது. இந்தியாவின் முயற்சியை முன்போல மேலை நாடுகள் தோற்கடிக்கக் கூடும். ஆனால் திபேத் சம்பவத்திற்குப் பிறகும் இந்தியா இவ்விதம் சீனவின் சார்பில் முயற்சி எடுத்திருப்பதே மேலை நாடுகளின் வட்டாரங்களுக்கு பெரும் ஏமாற்றம்.

மேலை நாடுகளின் இவ்வித போக்கு பற்றி இந்திய பிரதிநிதி கூறியதாவது:—‘ஐ நா. ஸ்தாபனம் உலக நாடுகள் அனைவற்றின் பிரதிநிதியாக இயங்கவேண்டுமென்பதே இந்தியாவின் நிலை. இதை மேலை நாடுகள் உணரவில்லை. யார் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், சீன மக்கள் சீன சர்க்காரால ஆட்சி புரியப்பட்டு வருகிறது; பார்மோசாவிலுள்ள கோஷ்டியினருக்கு சீனவில் எவ்வித அதிகாரமுமில்லை. இதுவே உண்மை.

ஐ நா. வில் சீன பிரதிநிதித்துவம் பெறுவதற்கும் திபேத் பிரச்சினைக்கும் சம்பந்தமே இல்லை.

#### பாகிஸ்தான் எதிர்க்கும்

ஆசிய, ஆப்பிரிக்க கோஷ்டியில் சீன விஷயமாகவும் பிளவு உண்டு. கடந்த வருடம் அமெரிக்காவுடன் சேர்ந்துகொண்டு பாகிஸ்தான், துருக்கி, பிலிப்பைன், தாய்லந்து ஆகிய நாடுகள் ஓட்டு போட்டன. மலாயா, சவூதி அரேபியா, டுனீஷியா இந்நாடுகள் ஓட்டு போடுவதில் கலந்துகொள்ளவில்லை.

(ராய்ட்டர்)

# ஜுலை 20-ந் தேதியை வியத்நாம் தினமாக் கொண்டாடுக!

## ஆப்பிரிக்க-ஆசிய ஒருமைப்பாடு கவுன்சிலின் வேண்டுகோள்

கெய்ரோ, ஜுலை 5—

ஜுலை 20-ந் தேதியை வியத்நாம் தினமாகக் கொண்டாடி, அந்நாட்டின் சமாதானபூர்வமான ஐக்கியத்திற்கு சகல முயற்சிகளையும் எடுக்குமாறு ஆப்பிரிக்க-ஆசிய ஒருமைப்பாடு கவுன்சிலின் நிரந்தரச் செயற்குழு. எல்லா நாடுகளின் ஆசிய-ஆப்பிரிக்க ஒருமைப்பாடுக் கமிட்டிகளுக்கும் எல்லா சமாதான சக்திகளுக்கும் வேண்டுகோள் விடுத்துள்ளது.

வியத்நாமை சமாதான ரீதியில் மீண்டும் ஒன்றிணைப்பது பற்றிய 1954 ஜுலை 20-ந் தேதிய ஜெனிவா ஒப்பந்தங்களை அமல் நடத்த வேண்டும் என்றும், வியத்நாமிலிருந்து அமெரிக்கத் துருப்புகளைத் திரும்பிப் பெற வேண்டுமென்றும், வியத்நாமிலுள்ள அமெரிக்க ராணுவத் தளங்களைக் கலைக்க வேண்டுமென்றும், மக்கள் மீது தொடுக்கப்பட்டுவரும் அடக்குமுறை உடனடியாக நிறுத்தப்பட வேண்டுமென்றும், தெற்கு வியத்நாமில் இருந்து வரும் பாஸிஸ்டுச் சட்டங்களை ரத்துசெய்ய வேண்டுமென்றும் நிரந்தர செயற்குழு தனது கடிதத்தில் கோருகிறது.

நகோ டின் டியம் கூட்டத்தின் உதவியுடன் ஏகாதிபத்தியவாதிகள் வியத்நாம் ஜனநாயகக் குடியரசின் எல்லையில் நடத்திய ஆத்திரமூட்டல்களையும் நிரந்தர செயற்குழு வன்மையாகக் கண்டிக்கிறது. பூ லோய் சித்திரவதைக் கூடத்தில், 1000-க்கு மேற்பட்ட கைதிகளின் உணவில் விஷம் கலக்கப்பட்டு, படுகொலை செய்யப்பட்ட அக்கிரமத்தையும் செயற்குழு கோபாவேசத்துடன் கண்டித்திருக்கிறது.

# கம்யூனிஸ்ட் ஆட்சியும் கத்தோலிக்க திருச்சபையும்

ஜி. சாமுவேல்
இந்தியக் கம்யூனிஸ்டு கட்சி
தமிழ்நாடு நிர்வாகக்குழு உறுப்பினர்

கேரளத்தின் ஜனத்தொகையில் சுமார் 33சதவிகிதம் கிறிஸ்தவர்கள். அவர்களில் பெரும்பகுதி மக்கள் ரோமன் கத்தோலிக்க சபையைச் சேர்ந்தவர்கள்.

உலகிலேயே மிகப் பெரிய மத ஸ்தாபனம் ரோமன் கத்தோலிக்க மத ஸ்தாபனம். இதைவிட வேறு கிடையாது. ஐந்து கண்டங்களிலும் பரந்து கிடக்கும் கத்தோலிக்க பக்தர்கள்மேல் இத்தாலியிலுள்ள ரோமாபுரியிலிருந்து அரசாளுகிறார் போப்பாண்டவர். இவர் இயேசுவின் வாரிசாகக் கருதப்படுகிறார். இந்த ஸ்தாபனததில் அவருடைய சொல்லுக்கு மறுசொல் கிடையாது அவர் ஒரு ஏதேச்சாதிகாரியாக செயலாற்றுகிறார். இந்த ஸ்தாபனத்தில் ஜனநாயகம் என்பது துளிகூடக் கிடையாது. எல்லா கத்தோலிக்க பக்தர்களும் அவருடைய கட்டளைகளுக்குக் கீழ்படிந்தாக வேண்டும். அவருடைய கட்டளைகளை நிறைவேற்றுகிறவர்கள் போப்பாண்டவருக்குக் கீழ் உள்ள பிஷப்மார்களும் அவர்களுக்குக் கீழ் உள்ள குருமார்களுமாவர். ரோமன் கத்தோலிக்க மக்கள் மிகவும் பக்திமான்கள். மதத்துக்கு ஆபத்து என்றால் அவர்கள் தங்கள் உயிரையும்கொடுக்க சித்தமாயிருப்பார்கள்.

## ஏராளமான சொத்து

இந்த ஸ்தாபனத்துக்கு உலக முழுவதும் ஏராளமான சொத்துக்கள் உண்டு. விளைநிலங்கள், தோட்டக்காடுகள், தொழில் ஸ்தாபனங்கள் மூலம் விவசாயிகள், தொழிலாளிகள் பொது மக்களை சுரண்டி தங்கள் ஸ்தாபனத்தை பெருக்கி வருகிறார்கள். இந்தியாவிலும் தோட்டக்காடுகள், அதாவது காப்பித் தோட்டம், தேயிலைத் தோட்டம், ரப்பர் தோட்டம் முதலியவைகளும் தொழில் ஸ்தாபனங்களும் உண்டு. இவைகளில் உள்ள விவசாயிகளும் தொழிலாளிகளும் கடுமையாகச் சுரண்டப் படுகிறார்கள்.

## காரணம்

இந்த ஸ்தாபனத்தின் தலைவரான போப்பாண்டவர் முதற்கொண்டு குருமார்வரை கம்யூனிஸத்தின் பரமவைரிகள். அதற்கு முக்கிய காரணம் அவர்கள் தனி உடைமையாளர்கள், சுரண்டல் பேர்வழிகள், மதத்தின் பெயரால் மக்களை மயக்கி ஆதிக்கம் செலுத்துபவர்கள். ருஷ்ய புரட்சியின்போது இசார் நிலப்பிரபுக்களுக்குநேர்ந்த கதி இவர்களுக்கும் நேர்ந்தது. இவர்களுடைய அடக்குமுறைகளினால் அவதிப்பட்டுக்கொண்டிருந்த ஆயிரமாயிரம் விவசாயிகளுக்கு விடுதலையும் உழுது பயிரிட நிலமும் கிடைத்தன. சுதந்திர உணர்வும் சுய முயற்சியின் மேன்மையையும் அனுபவத்தில் அறிந்த மக்கள் இந்தப் பாதிரிமார்கள் பறைசாற்றும் பக்தி மார்க்கத்தைபற்றிப்பகுத்தறியத் தலைப்பட்டனர். ஆகையால் போப்பாண்டவர்பிடிப்பிலிருந்து பலர் விடுபட்டனர். தேசியச் சர்ச்சுகளாக உருவாக்கிக் கொண்டனர். ஆகவேதான் கம்யூனிஸ்டு கோட்பாடுகளால் தங்கள் தனி உடைமைகளுக்கும், ஏகபோக ஆதிக்கத்துக்கும் ஆபத்து ஏற்படுகிறது என்று அனுபவத்தில் அறிந்துகொண்டனர் இந்த சாமியார்கள். கம்யூனிஸத்தின் ஜென்ம விரோதிகளாக அவர்கள் இருப்பதின் பின்னணி இது.

## பள்ளி ஒரு வியாபார ஸ்தலம்

இப்படிப்பட்டவர்கள் கேரளத்தில் பள்ளிக்கூடங்களை ஒரு வருமானந்தரும் வியாபாரமாக நடத்தி வந்தார்கள் என்றால் மிகையாகாது. ஆசிரியர்களுடைய சம்பளம் முழுவதையும் அரசாங்கம் மானியமாகக் கொடுத்துவருகிறது கேரளத்தில் அதை பள்ளிக்கூடமானேஜர்கள் பெற்று ஒரு பகுதியை மட்டுமே ஆசிரியர்களுக்குக் கொடுக்கிறார்கள். மீதமுள்ளதை தங்கள் ஸ்தாபனத்தின் தேவைகளுக்கென வைத்துக்கொள்ளுகிறார்கள். இது பகிரங்க இரகசியம் மேலும், சாமியார்களையும்கன்னியாஸ்திரிகளையும் ஆசிரியர்களாக நியமித்து அவர்கள் பெயரிலும் சர்க்காரிடம் மானியம் பெற்றுக் கொள்ளுகிறார்கள். ஆனால் அவர்களுக்கு உணவும், உடையும், தங்க இடமும மட்டுமே கொடுக்கப்படுகிறது. மீதமுள்ளது ஸ்தாபனத்தின் பணப்பெட்டியில் புகுந்துவிடும். ஆனால் அவர்களிடமும் முழுச்சம்பளத்துக்கும் கையெழுத்து வாங்கப்படுகிறது.

## சட்டம் வந்தது

கேரளக் கல்வி அமைச்சர் திரு. ஜோசப் முண்டசேரி ஒரு கிறிஸ்தவர். அவருக்கு இந்த விஷயங்கள் நன்றாகத் தெரியும். ஆகவேதான் கிறிஸ்துவின் போதனைகளுக்கே விரோதமான இந்த அடாத செய்கைகளுக்கு சட்டத்தின் மூலம் முடிவுகட்டி இந்த சாமியார்கள் நரகத்துக்குப் போகாவண்ணம் அவர்களைக் காப்பாற்றிவிட்டார்! இதற்காக அவர்கள் நன்றியுள்ளவர்களாக இருக்கவேண்டும்! இனி ஆசிரியர்களுக்கு அரசாங்கம் கொடுக்கும் சம்பளம் நேரடியாக அவர்களுக்குக் கொடுக்கப்படும். அதில் ஒரு காசுகூட இடையில் இருப்பவர்கள் திருட முடியாது. ஆசிரியர்கள் வேலை செய்வதற்கு லாயக்குள்ளவர்களுடைய பட்டியல் ஒன்று பப்ளிக் சர்வீஸ் கமிஷனால் தயார் செய்யப்படும். அதிலிருந்துதான் பள்ளிக்கூட மானேஜர்கள் ஆசிரியர்களைத் தேர்ந்தெடுக்கலாம். ஆகையால் இதுவரை நடந்ததுபோல ஆசிரியர் பதவிக்குத் தகுதியற்ற சாமியார்களையும் கன்னியாஸ்திரிகளையும்ஆசிரியர்களாக நியமிக்கமுடியாது. அவர்களை நியமிக்க வேண்டுமானால் அவர்களும் பப்ளிக் சர்வீஸ் கமிஷன் முன்பு ஏனைய ஆசிரியர்களோடு போட்டியிட்டு ஆசிரியர் பதவிக்கு தகுதியுள்ளவர்களென்று தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். இதை அவர்கள் சகிக்கமுடியுமா!

## ஒரே விதமான பாட புத்தகங்கள்

மற்றொரு விஷயம். கேரள ராஜ்யம் முழுவதிலும் ஒரேவிதமான பாடப்புத்தகங்கள் இதுவரை இருந்ததில்லை. ஆகையால் கல்வியின் தரம் இடத்துக்கிடம் மாறுபட்டதாக இருந்துவந்துள்ளது. இந்த நிலைமையை மாற்றி அமைப்பதற்காக பாடப்புத்தகங்களை நிர்ணயிக்கும் பொறுப்பை சர்க்கார் ஏற்றுக்கொண்டிருக்கிறது இதை ஒரு நொண்டிச் சாக்காக உபயோகித்து கம்யூனிஸத்தை குழந்தைகளுக்கு ஊட்டுவதற்காக இப்படிச் செய்யப்படுகிறது என்றுகதறுகிறார்கள். சிலபாடப் புத்தகங்களைச் சுட்டிக்காட்டி அவைகளில் கம்யூனிசக் கருத்துக்கள் புகுத்தப்பட்டிருப்பதாக புகார் செய்கிறார்கள். ஆனால் சர்க்கார் இதற்கு ஆணித்தரமான பதிலளித்துவிட்டனர். இந்தப் புத்தகங்களெல்லாம் இந்த சர்க்காரால் அல்லது சர்க்கார் உத்தரவின்படி எழுதப்பட்டவையுமல்ல. இந்த சர்க்காரால் பாடப் புத்தகமாக வைக்கப்பட்டவையுமல்ல. அவை சென்ற காங்கிரஸ், பி. சோ. சர்க்கார்கள் இருந்த காலத்திலேயே பாடப்புத்தகங்களாக இருந்தவை என்று திட்டவட்டமாகத் தெரிவித்துவிட்டனர். ஆனால் இதை கிறிஸ்தவ சாமியார்கள் அறிந்தும் அறியாதவர்கள் போலவும் புரிந்தும் புரியாதவர்கள் போலவும் அதே பல்லவியைப் பாடிக்கொண்டிருக்கிறார்கள்.

## உண்மைக்கு எதிர்ப்பு

உண்மை என்னவென்றால் இதுவரை சரித்திரத்தைப் புரட்டியும், ஜனநாயக இயக்கங்களை இழிவுபடுத்தியும், கம்யூனிசத்தைப் பற்றியும, உலக மேதைகளைப் பற்றி தூஷணை நிறைந்த கட்டுரை கொண்ட பாடப் புத்தகங்களைத்தான் நினைத்த மூப்பாக பாடப் புத்தகங்களாக வைத்து குழந்தைகளின் உள்ளங்களைப் பாழ்படுத்தி வந்தார்கள். அதற்கு முற்றுப் புள்ளிவைத்து விட்டது இச்சட்டம். இதுவரை இழைக்கப்பட்டு வந்த அநீதிக்கு முடிவு கட்டப்பட்டது. இதைத்தான் மதத்துக்கு ஆபத்து என்று வீச்சுவீச்சென்று கத்துகிறார்கள்.

தவிர, இந்தச்சட்டம் வருவதற்கு முன்பு பல புத்தகக் கம்பெனிகள் பள்ளிக்கூட நிர்வாகிகளை அணுகி தங்களால் வெளியிடப்பட்ட புத்தகங்களைப் பாடப் புத்தமாகவைக்கவேண்டுமென்று போட்டியிட்டனர் போட்டி என்றால் கேட்கவா வேண்டும்! யார் அதிக தொகை கமிஷன், மறைமுக கமிஷன் கொடுக்கிறார்களோ அவர்கள் தான் அந்தபோட்டியில் வெற்றி பெறுவார்கள். இப்படி ஒரு தொகை கிடைத்ததே; அது இனி எப்படிக் கிடைக்கும்?

## வேஷம்

இப்படித் தங்கள் நலன்கள் பாதிக்கப்படுவதால்தான் ரோமன் கத்தோலிக்க சாமியார்கள் கேரளக் கல்விச் சட்டத்தைக் கடுமையாக எதிர்க்கிறார்கள். ஆனால் அவர்கள் மதத்துக்கு ஆபத்து ஏற்பட்டுவிட்டது, கம்யூனிஸம் புகுத்தப்படுகிறது, சுதந்திரம் பறிக்கப்படுகிறது என்று கூக்குரல் போடுகிறார்கள், கல்விச் சட்டத்தை எதிர்த்து அதை வாபஸ்பெறச் செய்வது மட்டுமல்ல அவர்கள் நோக்கம்; கம்யூனிஸ்ட் ஆட்சியையே ஒழித்துக்கட்ட வேண்டும் என்பதே அவர்கள் நோக்கம். ஏனெனில் மேலே குறிப்பிட்டுள்ளபடி ரோமன் கத்தோலிக்கத் திருச்சபை கம்யூனிஸத்தின் பரம வைரி.

## ஏசுவின் போதனைக்கே எதிரிகள்

கம்யூனிஸ்ட் ஆட்சியை ஒழித்துக்கட்டுவதற்கு அவர்கள் எடுத்துக்கொள்ளும் நடவடிக்கைகள் என்ன? அக்கம்பக்கத்திலுள்ள மரங்களின் கிளைகளை வெட்டி குண்டாந்தடிகள் தயார் செய்கிறார்கள். கெட்டுப்போன மின்சார பல்புகளை சேகரித்து அதற்குள் அமிலத்தை ஊற்றி அடைத்து வைக்கிறார்கள். சாதாரண நாட்டு வெடி மருந்து கொண்டு கைக்குண்டுகள் தயார் செய்கிறார்கள். கத்திகள், ஈட்டிகள் துப்பாக்கிகள் சேகரிக்கிறார்கள் கோவில்களில் பிரசங்க பீடத்திலிருந்து கிறிஸ்தவ மக்களின் மத ஆவேசத்தை தூண்டும் வண்ணம் பிரசங்கங்கள் செய்கிறார்கள். சுற்றறிக்கைகள் அனுப்புகிறார்கள். கிறிஸ்தவ பக்தர்களே மிகப் பெரிய ஆபத்து ஏற்பட்டிருக்கிறது. கம்யூனிஸம் என்னும் பேய் இந்த நாட்டில் உலாவி வருகிறது. இந்த ராஜ்யத்தில் மக்களை ஏமாற்றி ஆட்சிபீடத்திலமர்ந்துள்ளனர்கம்யூனிஸ்டுகள். அவர்கள் கொலைகாரர்கள், கொள்ளைக்காரர்கள், குண்டர்கள், கிறிஸ்து மார்க்கத்தையே ஒழித்துக்கட்ட கங்கணம்கட்டிக் கொண்டுள்ளனர். இந்தப்பேயை ஒழிக்க கிறிஸ்தவர்கள் ஒரு சிலுவை யுத்தம் (Crusade) நடத்தியாகவேண்டும். இந்தப் புனிதப் போரில் பங்குகொள்ள வாலிபர்கள் தயாராகவேண்டும். இதில் மரிப்பவர்கள் இரத்தச் சாட்சிகளாவார்கள். அவர்களுக்கு பரலோக இராஜ்யத்தில் நிச்சயமாக இடமுண்டு. ஆகையால் இந்த போருக்கு தயாராகுங்கள். கிறிஸ்டோபர் படையில் சேருங்கள்” என்றிவ்வாறாக பலாத்கார நடவடிக்கைகளுக்கு தூண்டுகிறார்கள் படை திரட்டிப் பயிற்சி கொடுத்து ஆயுதங்களை வழங்குகிறார்கள்.

“ஒருவன் ஒரு கன்னத்திலறைந்தால் மறு கன்னத்தைக் காட்டு” என்று உபதேசித்த போதகரின் சீடர்களின் நடவடிக்கைகள் இவை.

## அதே முறைகள்

ஸ்பெயின் நாட்டில் மக்களுடைய எழுச்சியை அடக்கி சர்வாதிகார ஆட்சியை நிறுவ பிராங்கோவுக்கு உதவிசெய்த ரோமன்கத்தோலிக்க ஸ்தாபனம் அன்று அங்கு கையாண்ட அதே முறைகளைக் கையாண்டு கம்யூனிஸ்ட் ஆட்சியைக் கவிழ்ப்பதற்கு சதி செய்கிறது, அதே கிறிஸ்டோபர் படை! மதத்துக்காபத்து என்ற அதே கூக்குரல்! போருக்கழைப்பதற்கு கோவில் மணி இங்கேயும் பார்க்கிறோம்.

கம்யூனிஸ்ட் ஆட்சியைக் கவிழ்ப்பது எங்கள் நோக்கமல்ல; கல்விச் சட்டத்தை எதிர்ப்பதே எங்கள் குறிக்கோள் என்று மாய்மாலமாகப் பேசுகிறார்கள். அதே சமயத்தில் கல்விச்சட்டத்தில் அவர்களுக்கு பிடிக்காத விதிகளை மாற்றுவதற்குப் பேச்சுவார்த்தைகளுக்கு சர்க்கார் அழைப்பு விடுத்தால் கூடிப்பேச மறுக்கிறார்கள். இத்தகைய அக்காலத்திய குருக்களைப் பார்த்துத்தான் இயேசு மனங்கசந்து கூறினார். “மாயமாலக்காரரே! உங்களுக்கு, ஐயோ! நீங்கள் பிறவாதிருந்தால் நலமாயிருக்கும்!” என்று.

நாயர் சேவாசங்கத்தோடும், தோட்ட முதலாளிகளோடும், நில உடைமையாளர்களோடும், இதர வகுப்புவாத ஸ்தாபனங்களோடும், அரசியல் கட்சிகளோடும் சேர்ந்து கொண்டு கலகத்தை தூண்டிவிட்டு, பொதுச்சொத்தான பஸ்களுக்கும், படகுகளுக்கும் நாசம் விளைவிப்பது, பள்ளிக்கூடங்களுக்கு கொள்ளி வைப்பது, கொள்ளையடிப்பது போன்ற பலாத்கார செயல்களைத் திட்டமிட்டு நடத்திவருகிறார்கள். அதே சமயத்தில் அமைதிக்கும் ஒழுங்குக்கும் பங்கம் வந்துவிட்டது, ஜனநாயகம் பறிபோகிறது என்று குரலெழுப்பி, மத்திய சர்க்கார் தலையிட்டு கம்யூனிஸ்டு சர்க்காரை நீக்க வேண்டும் என்று இடைவிடாது கோரிவருகிறார்கள்.

பால் பிரச்சர்ட் என்னும் ஒரு பிரெஞ்சு எழுத்தாளர் “கிறிஸ்துவின் சாட்டை” என்ற புத்தகத்தில் “அன்று இயேசு ஒரு கழுதையைப் பிடித்துவரும்படித் தன் சீடர்களுக்குக் கட்டளையிட்டார்; ஆனால் இக்காலத்தில் இயேசுவுக்கு சீடர்களைப் பிடித்து வரும்படிக் கழுதைகள் அனுப்பப்படுகின்றன” என்று கிறிஸ்துவ குருமார்களுக்குச் சாட்டையடி கொடுத்திருக்கின்றார். இது எவ்வளவு உண்மை என்று இன்று நாம் கேரளத்தில் காண்கிறோம்.

# சிவந்திபுரம் பஞ்சாயத்து தலைவராக கம்யூனிஸ்ட் தேர்வு



சென்னை, ஜூலை 12—
சிவந்திபுரம் பஞ்சாயத்து தலைவர் தேர்தல் 10-7-59ல் அம்பை ரெவின்யூ இன்ஸ்பெக்டர் திரு முருகையா அவர்களால் நடத்தப்பட்டது. கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் போட்டியிட்ட கம்யூனிஸ்ட் கட்சியின் நெல்லை ஜில்லா கிராமக் கமிட்டி மெம்பரும் சிங்கை நகரக்கமிட்டிக் காரிய தரிசியுமான தோழர் பி. சொரணத்திற்கு 7 ஓட்டுகளும் காங்கிரஸ் கட்சியின் சார்பில் போட்டியிட்ட திரு. ஆல்பர்ட்டுக்கு 6 ஓட்டுகளும் கிடைத்தன. கட்சியின் சார்பில் போட்டியிட்ட தோழர் சொரணம் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

## கேரளத்தில் காங்கிரஸ் போக்குக்கு கண்டனம்

### தி. மு. க. பொதுக்குழு தீர்மானம்

மாயூரம், ஜூலை 14—
இங்கு ஜூலை 11, 12ம் நாட்களில் நடைபெற்ற திராவிட முன்னேற்றக் கழகப் பொதுக்குழுக் கூட்டத்தில் கேரள கிளர்ச்சியைக் கண்டித்து பின்வரும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

"கேரளத்தில் ஜனநாயக முறைப்படி பெரும்பான்மையான வாக்குகளைப் பெற்று அமைந்துள்ள ஆட்சியைக் கவிழ்ப்பதையே நோக்கமாகக் கொண்டு முறையற்ற — ஜனநாயக மரபு மீறிய கிளர்ச்சியை நடத்தி வரும் காங்கிரஸ் கட்சியின் போக்கை தி. மு. க. பொதுக்குழு வன்மையாகக் கண்டிக்கிறது.

"கிளர்ச்சியை நிறுத்த நிபந்தனையாக மறு தேர்தல் நடத்த வேண்டுமென்று காங்கிரஸ் கட்சியினர் பிடிவாதம் காட்டுவது, வாக்காளர்களின் தீர்ப்பைப் பெரிதும் அவமதிப்பதாகும் என்பதுடன் ஜனநாயகத்தைச் சீர்குலையச் செய்யும் இழிசெயலாகும் என்பதையும் எனவே கிளர்ச்சியை உடனடியாக நிறுத்துவது தான் ஜனநாயகப் பண்பாகும் என்பதையும் தி மு க. பொதுக்குழு எடுத்துக் காட்டுகிறது."

... யும், தமிழகத்தில் எல்லா இடங்களிலும் பஸ் போக்குவரத்தைத் தேசிய மயமாக்கவேண்டுமெனக் கேட்டுக்கொண்டும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## நீர்ப்பாசன கட்டணத்தை குறைக்கவேண்டும்

### ஆலாம்பாளையம் விவசாயிகள் சங்கக் கோரிக்கை

ஆலாம்பாளையம், ஜூலை 3—
3 7-59ல் ஆலாம்பாளையம் விவசாயிகள் சங்கத்தின் சார்பில் நடந்த பொதுக்கூட்டத்தில் பின்வரும் தீர்மானங்கள் நிறைவேறின:

1. சேலம் ஜில்லா போர்டு சந்தைகேட் வரியை நான்கு மடங்காக உயர்த்தியிருப்பதை ரத்து செய்யவேண்டும்.
2. மேடான நிலங்களுக்கு ஏற்றம் இறைத்து நீர்ப்பாய்ச்ச அனுமதி வேண்டும்.
3. மேட்டூர் வடகரைக்கால் பாயும் நிலங்களுக்கு விதிக்கும் கட்டணத்தை (நீர் கூலி வசூலை) பாதியாகக் குறைக்கவேண்டும்.
4. அரசியல் கைதிகள் விடுதலை செய்யப்படவேண்டும்.

# பி. எஸ்ஸி. படித்து வேலை கிடைக்காததால் தற்கொலை

சென்னை, ஜூலை 13—
கடந்த வெள்ளியன்று பாரிஸ் கார்னர் கட்டிடத்திலிருந்து கீழே விழுந்து மரணமடைந்த வாலிபரது அடையாளம் கண்டுபிடிக்கப்பட்டுவிட்டது.

இறந்த வாலிபரது பெயர் கிருஷ்ணசாமி நாயர் (வயது 21). பி. எஸ்ஸி. படித்துவிட்டு வேலையில்லாமல் இருந்தார். மலையாளத்தைச் சேர்ந்த அவர், சென்னை எழும்பூரில் உள்ள தமது மைத்துனரான கேப்டன் தம்பி என்பவரது வீட்டிற்கு வந்திருந்தாராம்.

சம்பவம் நடந்த கடந்த வெள்ளிக்கிழமை காலை முதல் அவர் 'காணவில்லை' என்று கேப்டன் தம்பி எழும்பூர் போலீசில் புகார் செய்திருந்தார். பத்திரிகைச் செய்தி மூலம் அவர் இறந்த வாலிபரை அடையாளம் காட்டினர்.

நேற்று பிற்பகல் வடக்கு பீச் போலீஸ் ஸ்டேஷன் சப்-இன்ஸ்பெக்டர் திரு. கன்னியப்பனால் பிரேத விசாரணை நடத்தப்பட்டு "தவறி விழுந்ததால் ஏற்பட்ட மரணம்" என்று முடிவு செய்யப்பட்டு பிணம் சொந்தக்காரர்களிடம் ஒப்படைக்கப்பட்டது.

# பெண்களைக் கைது செய்யாததால் வடக்கன் பாதிரிக்கு கனகோபம்

## சட்டமே போய்விட்டதாக ஓலம்

### கேரள சர்க்காருக்கு பீருமேடு தொழிலாளிகள் பேராதரவு

பீருமேடு, ஜூன் 29—
கேரள சர்க்காரை அகற்றுவதற்காக 29-6-59-ல் அடையாள வேலைநிறுத்தம் செய்ய வேண்டுமென்று ஐ. என். டி. யு. சியும் ஆர். எஸ். பி., பி. எஸ். பி. யும் அறைகூவல் விடுத்திருக்கிறார்களல்லவா? மொத்தம் 26000 தோட்டத் தொழிலாளர்கள் உள்ள பீருமேடு வட்டாரத்தில் இவர்கள் வேண்டுகோளை நிராகரித்துவிட்டு கேரள சர்க்காருக்கு ஆதரவாக 23000 தொழிலாளிகள் வேலைக்கு சென்றனர். 29-ம் தேதி பெரும் மழையும் பயங்கரமான காற்றும் இருந்தது. சாதாரணமாக இவ்வளவு மழையுள்ள தினங்களில் 50, 60 சதவீதம் தொழிலாளர்கள் தான் வேலைக்கு செல்வது வழக்கம். ஆனால் கொடுங் காற்றையும், பெருமழையையும் மதிக்காமல் இன்று 23000 தொழிலாளிகளும் வேலைக்குச் சென்றனர்.

பெரும் காங்கிரஸ்தோட்டமுதலாளிகளான கருந்தருவி கருங்குளம், ஹெலி பெரியாடீ கம்பெனி முதலானவர்கள்வேலையை நிறுத்தும்படி தொழிலாளிகளைத் தூண்டினர். தொழிலாளிகள் சம்மதிக்காமல் வேலைக்கு வரவே கருந்தருவி, கருங்குளம் தோட்ட நிர்வாகிகள் தொழிலாளிகளுக்கு வழக்கம் போல் கொடுக்கும் கொழுந்து கிள்ளும் வேலை கொடுக்காமல் பெண்களுக்கு களை வேலை கொடுத்தார்கள். நீ என்ன வேலை கொடுத்தாலும் சரி வேலை நிறுத்த மாட்டோம் என்று பெண் தொழிலாளிகள் அனைவரும் வேலைக்கு சென்றனர்,

ஏலப்பாறை மண்டலம் காங்கிரஸ் தலைவரும், பஞ்சாயத்து தலைவருமான ஸ்ரீ. குரியச்சனின் வாசஸ்தலம், ஆர். எஸ். பி. யின் கோட்டை என்று கூறப்படும் வாகமண் தோட்டத்தில் ஒரு தொழிலாளிகூட வேலைநிறுத்தம் செய்யவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

கோட்டைமலை என்ற தோட்டத்தில் வேலைக்கு சென்ற தொழிலாளிகள் மீது ஆர். எஸ். பி. குண்டர்கள் சரமாரியாக கற்களை வீசினர்.

திருச்சூர், ஜூலை 14—
கேரள போராட்ட சமிதிக்காரர்களும், எதிர்க்கட்சிகளும் சேர்ந்து அரும்பாடுபட்டு ஒரு பெரிய மூல பல சைன்யத்தை அதாவது பெண்கள் பட்டாளத்தை (சுமார் 2000 பேர்களை) திரட்டி வந்தார்கள். அந்தப் போராட்ட வீராங்கனைகளில் பெரும் பகுதியினரும் கத்தோலிக்க சர்ச்சுகளில் பாதிரிகளால் மதவெறி யூட்டப்பட்டு கொண்டுவரப் பட்டவர்கள். அவர்கள் இங்கு ஜில்லா கலெக்டர் அலுவலகத்தின் முன்னால் கும்பலாக உட்கார்ந்து கொண்டு கம்யூனிஸ்ட் சர்க்கார் ஒழிக! ராஜினாமா செய்க! என்று கூச்சல் போட்டுக் கொண்டிருந்தார்கள். இப்படி 4 மணி நேரம்வரை உட்கார்ந்து கொண்டே கத்தினர்கள். போலீஸாரும் வேடிக்கைப் பார்த்துக் கொண்டேயிருந்தார்கள். ஒருவரையும் கைது செய்யவில்லை யாரையும் அந்த இடத்தைவிட்டு அகற்றவுமில்லை.

கும்பல் கூடிப் பிரயோஜனமில்லையென்று கண்ட போராட்டத் தலைவர்கள் பத்துப் பத்துப் பேராக போராட்டத்தில் ஈடுபடுத்தினர்கள். கலெக்டர் அலுவலகத்தின் வாசல்முன் சுவர் வைத்தது போல் 0 பெண்கள் போய் நின்றார்கள். அவர்களை போலீஸார் லாரியில் ஏற்றிக்கொண்டு போனார்கள். உடனே அடுத்த 10 பேர் வாசல் முன் சென்று அடைத்துக் கொள்ள முன் வந்தார்கள். அதற்குள் போலீஸார் வாசலைச் சுற்றிலும் நின்றுகொண்டு பெண்களை போகவிடாமல் தடுத்துவிட்டார்கள். அதனால் மறியல் செய்ய முடியவில்லை. பெண்கள் கைது செய்யப்படவுமில்லை.

இப்படி பெண்களைக் கைது செய்யாதது திருச்சூர் ஜில்லா போராட்ட சமிதி காரியதரிசியானவடக்கன் பாதிரிக்குப் பிடிக்கவே இல்லை. இதுபோல் கேரள கம்யூனிஸ்ட் எதிர்ப்பு முன்னணி காரியதரிசி வில்லிங்டனுக்கும் பிடிக்கவில்லை.

இதுபற்றி வடக்கன் பாதிரி அங்கு கூடியுள்ள கூட்டத்தில பேசுகையில் போலீஸ் மீது எரிந்து எரிந்து விழுந்தார். "இந்தப் போலீஸார் ஒன்று ஆர்ப்பாட்டக்காரர்களை கைது செய்ய வேண்டும், இல்லையேல் மறியல் செய்யவாவது அவர்களை அனுமதிக்க வேண்டும். ஆர்ப்பாட்டக்காரர்களை கைது செய்யாமல் விட்டு விடுவதிலிருந்தே என்ன தெரிகிறது என்றால், கம்யூனிஸ்ட் சர்க்காரின் நிர்வாக இயந்திரம் உடைந்து தகர்ந்து நொறுங்கி விட்டதென்றே தெரிகிறது. யாரும் சட்டத்தை மீற உரிமை கிடைத்து விட்டது, என்பதையே இது குறிக்கிறது. ஆனால் அப்படிச் சட்டத்தை மீறுவதைக் கூட கேரள ராஜ்யத்தில் தடுத்து விட்டார்களே" என்று வடக்கன் பாதிரியார் பேசினார்.

இந்த நிலைமையில் காலையில் கைது செய்யப்பட்ட 10 பெண்களும் மாலையில் விடப்பட்டு விட்டார்கள். அவர்கள் ஊர்வலமாக கம்யூனிஸ்ட் எதிர்ப்பு கோஷங்களை உச்சரித்துக் கொண்டே அவரவர் வீடுகளுக்குப் போய் விட்டார்கள்.

மஞ்சள் தொப்பி பெண் வாலண்டியர்கள் மஞ்சள் கொடிகளைத் தூக்கிக் கொண்டு ஓர் ஊர்வலம் நடத்தினர்கள். ஜனங்கள் வீதிகளில் நின்று வேடிக்கைப் பார்த்தார்கள்.

# கேரள சர்க்காருக்கு ஆதரவு

## பிற்போக்காளர் கிளர்ச்சிக்குக் கண்டனம்

சென்னை, ஜூலை, 13—
கேரள சர்க்காரை எதிர்த்து பிற்போக்காளர் நடத்தும் கிளர்ச்சியை வன்மையாகக் கண்டித்தும் கம்யூனிஸ்ட் சர்க்காருக்கு ஆதரவு தெரிவித்தும் தமிழ் நாடெங்கும் கூட்டங்கள் நடந்துள்ளன.

### பார்த்திபனூர்

30.6-59-ல் பார்த்திபனூர் விவசாயிகள் சங்கக் கூட்டம் நடந்தது. முத்துக் கருப்பக் கோனூர் தலைமை வகித்தார்.

கேரளத்தில் நடக்கும் கிளர்ச்சியைக் கண்டித்தும் கம்யூனிஸ்ட் சர்க்காரை ஆதரித்தும் தீர்மானங்கள் நிறைவேறின.

### சின்னூனூரில்

ஓமலூர் தாலூகாவைச் சேர்ந்த சின்னூனூரில கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் தோழர் எம். முனியப்பன் தலைமையில் பொதுக்கூட்டம் நடந்தது.

தோழர்கள் ஜி. சாமுவேல், கே. செல்லப்பன், பி. அர்த்தனாரி வாத்தியார் ஆகியோர் அரசியல் நிலைமைபற்றி பேசினர்.

கேரள சர்க்காரை ஆதரித்தும் சின்னூனூர் பகுதிகளை இணைத்துப் பஞ்சாயத்து போர்டாக அமைத்து தேர்தல் நடத்தக் கோரியும் ஜலகண்டாபுரத்திலிருந்து சின்னூனூர் வழியாகப் பாதை அமைக்கக் கோரியும் தீர்மானங்கள் நிறைவேறின.

# இராக்கில் மன்னன் ஆட்சியோடு ஏகாதிபத்திய ஆதிக்கமும் ஒழிந்தது

## சென்னையில் இராக் புரட்சி தினம்

## ஏ. எஸ். கே. விளக்க உரை

சென்னை, ஜூலை 14—
இன்று மாலை 6-30 மணிக்கு இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் சென்னை மாவட்டக்குழு அலுவலகத்தில் இராக் புரட்சி முதலாவது ஆண்டு நிறைவு விழா தோழர் டி. பழனிச்சாமி தலைமையில் நடைபெற்றது.

தலைவர் பேசுகையில், கடந்த ஓராண்டில் இராக் குடியரசு ஏகாதிபத்திய எதிர்ப்பு முகாமில் உறுதியாக இருந்து, உலக சமாதானத்திற்கு விஷயதானம் செய்திருப்பதையும், இராக்கில் நிலச் சீர்திருத்தம் செய்திருப்பதையும், தொழிலாளர், பொது மக்கள் வாழ்க்கைத்தரம் உயரவும் நடவடிக்கை எடுத்திருப்பதையும் பாராட்டினர்.

சென்னை மாவட்டக்குழு செயலாளர் கே முருகேசன் பேசுகையில், 1959 ஜூலை 11-ந் தேதியோடு சென்ற வாரம் நடந்து முடிந்த இராக் தொழிற்சங்க சம்மேளனம், இராக் குடியரசை மேலும் மேலும் பலப்படுத்த சபதமெடுத்திருப்பதையும், இக் குடியரசுக்கு எதிராக, ஏகாதிபத்தியவாதிகள், அவர்களின் கையாட்கள் மற்றுமுள்ள பிற்போக்காளர் செய்யும் சதிகள் முறியடிக்கப்படும் என்று எச்சரித்திருப்பதையும், உலக தொழிற்சங்க சம்மேளனத்துடன் இராக் தொழிற்சங்க சம்மேளனத்தை இணைக்க முடிவு செய்திருப்பதையும், இராக் பொருளாதாரத்தின் மீதுள்ள பிரிட்டிஷ் ஆதிக்கத்தை எதிர்த்து முறியடிப்பதென்று முடிவு செய்திருப்பதையும், இராக் விவசாயிகளுடன் இராக் தொழிலாளர் சம்மேளனம் ஐக்கியப்பட்டு, இராக் மக்களின் அரசியல் பொருளாதார விடுதலையை பாதுகாக்க முடிவு செய்திருப்பதையும், இராக், சோவியத் வர்த்தக உறவுகளை வரவேற்றும், சோஷலிஸ்ட் நாடுகளுடன் இராக் வர்த்தக ஒப்பந்தங்களை நிறைவேற்றக் கோரியும், ஏகாதிபத்ய நாடுகளுடன் இராக் பொருளாதார ஒப்பந்தங்களை ரத்து செய்ய நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று முடிவு செய்திருப்பதையும் விளக்கினர்.

தமிழ்நாடு கவுன்சில் நிர்வாகக் கமிட்டி அங்கத்தினர் தோழர் ஏ. எஸ். கே. ஐயங்கார் பேசுகையில், ஏகாதிபத்ய வாதிகள் லெபனானைத் தாக்க, சேனாதிபதி காசிமிற்கு ஏராளமாகத் தளவாடங்களைக் கொடுத்ததை, இராக புரட்சிக் காரர்களுடன் தொடர்பு வைத்துக் கொண்டிருந்த சேனாதிபதி காசிம், புரட்சிக் காரர்கள் தெரிவித்தபடி, பாக்தாத் ரேடியோவையும், ஆட்சியையும் கைப்பற்றினர். மன்னனாட்சியும், மன்னனாட்சி கூடவே ஏகாதிபத்ய நிலப்பிரபுத்வ ஆதிக்கமும் 1958 ஜூலை 14-ல் நடந்த இராக் புரட்சியின் விளைவாக ஒழிந்தன என்பதை விளக்கி, கடந்த ஓராண்டில் இராக் மக்கள் முன்னேற உருப்படியான நடவடிக்கைகளை பிரதமர் காசிம் எடுத்திருப்பதையும் இராக் கம்யூனிஸ்ட் கட்சியும் இராக் தொழிலாளி, விவசாய மக்கள், இராக் பொது மக்கள் அனைவரும் ஆதரிப்பதையும் குறிப்பிட்டார். கூட்டத்தில் இராக் குடியரசு சாதனைகளை வரவேற்று தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

# இராக்கில் ஏகாதிபத்திய சதிகள்

## முறியடிக்க கம்யூனிஸ்ட் கட்சி முடிவு

### காஸிமையும் குடியரசையும் பாதுகாக்க உறுதி

பாக்தாத், ஜூலை 10—
இராக் கம்யூனிஸ்ட் கட்சியின் அரசியல் கமிட்டி நாட்டின் இன்றுள்ள நிலைமை குறித்து ஆராய்ச்சி செய்த பிறகு ஓர் அறிக்கை வெளியிட்டிருக்கிறது.

"ஏகாதிபத்திய சதிகள் ஆக்கிரமிப்புகள் இவற்றால் ஏற்படக்கூடிய அபாயங்களிலிருந்து இராக் குடியரசைப் பாதுகாக்க இராக் கம்யூனிஸ்ட் கட்சி திடசங்கல்பம் கொண்டிருக்கிறது கம்யூனிஸ்ட் கட்சியானது தனது சக்தி முழுவதையும் பிரயோகித்து இராக் குடியரசைப் பாதுகாக்க முன்வந்து விட்டது.

"இராக் கம்யூனிஸ்ட் கட்சியின் அரசியல் கமிட்டி ஜூலை 8, 9 தேதிகளில் கூடி, நாட்டின் நிலவரம் குறித்து பரிசிலனை செய்தது. நிலைமையை நன்கு ஆராய்ந்தபின் இந்த அறிக்கையை வெளியிட முடிவு செய்தது.

எவ்வளவு அபாயமான சதியாக விருந்தாலுஞ்சரி, எத்துணை தியாகங்கள் தேவையானாலுஞ் சரி, இராக் கம்யூனிஸ்ட் கட்சி தயங்காமல் சர்வ தியாகமும் புரிந்து ஆயுத பலத்தையும் உபயோகித்து, காஸிமின் தலைமையையும் இராக் குடியரசையும் பாதுகாக்க உறுதி கொண்டிருக்கிறது.

### ஏகாதிபத்திய சதி

கடந்த சில வாரமாக ஏகாதிபத்ய வெறியர்களும் அவர்களின் ஏஜண்டுகளும் சூழ்ச்சி புரிந்து அவதூறு கூறியு வருகின்றனர் தேசிய சக்திகளைப் பிளவு படுத்த முயலுகின்றனர். இராக் மக்கள் பிளவுபட்டு ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக் கொள்ளுமாறு ஏகாதிபத்யவாதிகள் தூண்டிவிட்டு வருகின்றனர். சர்க்காரில் மக்களுக்குள்ள நம்பிக்கையைப் பாழாக்கி மக்களுக்கும் சர்க்காருக்கும் அவநம்பிக்கை விளைவிக்க முயற்சிக்கின்றனர்.

கம்யூனிஸ்டுகள் மீது அவதூறு கூறி அவர்களது நிலையைப் பற்றி பொய்ப் பிரசாரம் செய்து தேசிய சக்திகளைப் பிளவுபடுத்த சதி நடக்கிறது. ஏகாதிபத்யவாதிகளின் இவ்வித பிரசாரத்தால் தேசியவாதிகளில் சிலர் மனம் குழம்பி விட்டனர். இசதி சதிக் கூட்டம் பலம் பெற்ற பிரதமர் அப்துல் கரீம் காஸிமுக்கு அவரிடம் மிக்க விசுவாசமுள்ள ராணுவத்தினரிடமும் ஜனநாயக சக்திகளிடமும் அவநம்பிக்கை விளைவிக்க முனைந்துள்ளனர். இச்சூழ்ச்சிகளையெல்லாம் கம்யூனிஸ்ட் கட்சி முறியடிக்கும்"

—நவசீன செய்தி

# உடனடியாக மக்களுக்கு உணவு, உடை கிடைக்க நடவடிக்கை

## மேற்கு இரியனை டச்சுக்காரரிடமிருந்து மீட்போம்

### புதிய இந்தோனேஷிய சர்க்கார் நோக்கங்கள் பற்றி சுகர்ணோ

ஜாகர்த்தா, ஜூலை 10—
இந்தோனேஷிய அரசியல் நிலவரம் பற்றி நவசீன செய்தி ஸ்தாபனம் தரும் தகவல் வருமாறு;

ஜனாதிபதி சுகர்ணோ 1945ம் வருஷம் அரசியல் சட்டப்பிரகாரம் ஜூலை 10-ந்தேதி இந்தோனேஷியா ஜனாதிபதி பதவி ஏற்றார். அவரே பிரதமருமானார்; அவரது தலைமையில் புதிய மந்திரிசபையும் பதவி ஏற்றது.

அன்று ஜனாதிபதி சுகர்ணோ நிகழ்த்திய பிரசங்கத்தில் "எனது தலைமையில் பதவி ஏற்ற புது மந்திரிசபை இன்று (ஜூலை 10-ந் தேதி) முதல் சட்டபூர்வமாக இயங்கிவரும்; சட்டப்படியுள்ள அதிகாரங்களையும் பிரயோகிக்கும்". என்றார்

ஜனாதிபதி மேலும் கூறியதாவது:—"எனது மந்திரி சபை, மூன்று அம்ச அரசியல் திட்டத்தை நிறைவேற்றும். சாத்தியமான வரை வெகு சீக்கிரத்தில் மக்களுக்குப் போதிய உணவு போதிய உடை வசதிகளை ஏற்படுத்துவதே எனது மந்திரிசபை கவனிக்கும் பிரதான வேலையாக இருக்கும்.

மக்களையும் நாட்டையும் பாதுகாக்க, நல்ல பந்தோபஸ்து ஏற்படுத்தவும் எனது மந்திரிசபை தீவிரமாக முயற்சிக்கும் அன்னியர் சதியாலும் அச் சதியின் காரணமாக ஏற்பட்டுள்ள உள்நாட்டுக் கலவரங்களாலும் இந்தோனேஷியாவின் பந்தோபஸ்துக்கு அபாயம் ஏற்பட்டு வந்துள்ளது.

ஏகாதிபத்தியத்தை எதிர்த்து இந்தோனேஷியாவின் போராட்டம் பொருளாதார ரீதியிலும் அரசியல் ரீதியிலும் தொடர்ந்து நடக்கும். ஏகாதிபத்தியத்தை எதிர்த்து அரசியல் ரீதியில் நடத்தும் போராட்டமானது மேற்கு இரியனை மீட்பதற்காகவே நடக்கும். மேற்கு இரியனை மீட்டே தீருவோம்."

# இலங்கை தென் அமெரிக்காவுடன் ஸ்தானிகர் தொடர்பை ஏற்படுத்தும்

கொழும்பு, ஜூலை 14—
இலங்கை அரசாங்கம் பிரேசில் ராஜ்யத்துடனும், அர்ஜண்டைனா ராஜ்யத்துடனும் சீக்கிரத்தில் ஸ்தானிகர் தொடர்பை ஏற்படுத்திக் கொள்ளும். இத்தகவலை இலங்கைப் பிரதமர் பண்டாரநாயகா வெளியிட்டார்.

இலங்கை மத்திய பாங்கியின் முன்னாள் கவர்னரான ஆர்தர் ரணசிங்காவிற்கு ஏற்பாடு செய்யப் பட்டிருந்த பிரிவு உபசார வைபவத்தின்போது இலங்கைப் பிரதமர் இத்தகவலை வெளியிட்டார். ஆர்தர் ரணசிங்கா ரோமில் இலங்கை ஸ்தானிகராகப்பணியாற்றுவார்.

# மின்சாரத் தொழிலாளர் கோரிக்கை தினம்

திருப்பத்தூர், ஜூலை 4—
திருப்பத்தூர் (வ. ஆ.) மின்சாரத் தொழிலாளர் சங்கம், கணக்காயர்கள் சங்கம் ஆகியவற்றின் சார்பாக "தமிழ்நாடு மின்சார தொழிலாளர் சம்மேளன" வேண்டுகோளின்படி நேற்று மாலை கோரிக்கை தின ஊர்வலமும் பொதுக் கூட்டமும் நடைபெற்றன.

சம்மேளன துணைத்தலைவர் எம்.ஏ மாலிக் தலைமையில் என். ஜி ஓ சங்கச் செயலாளர் சிவமூர்த்தி, சிவராஜன், ரயில்வே லேபர் யூனியன் செயலாளர் அருள்பீடி தொழிலாளர்சங்கதலைவர், கே. கிருஷ்ணசாமி ஓட்டல் தொழிலாளர் சங்கச் செயலாளர் என். கோபால் ஆகியோர் கோரிக்கைகளை உடனே நிறைவேற்ற மின்சார போர்டாரையும், அரசினரையும்கோரிசொற்பொழிவாற்றினர். மாநில கணக்காயர் சங்க துணைச் செயலாளர் சுந்திரேசன் அவர்கள் நாகர் கோவில் பகுதி தொழிலாளர்களை நிரந்தரமாக்கவேண்டுமென்றும் 3 2-59-ல் சென்னை அரசினர், மின்குழு, சம்மேளனம் ஆகியவரின் ஒப்பந்தத்தை அமுலாக்க வேண்டுமென்றும் நைனிடால் ஒப்பந்தத்தை சென்னை மின் குழுவு அமுலாக்க கோரியும் பிராவிடண்ட் பண்ட் திட்டத்தை யாவருக்கும் அமுலாக்க கோரியும் தொழிற்சங்க உரிமைகளை அமுலாக்க வேண்டுமென்றும், ஹார்வி மில்ஸ் நிர்வாகிகள் போக்கை கண்டித்தும், போராடும் தொழிலாளிகளை ஆதரித்தும், உண்ணாவிரதமிருந்த தலைவர்களை பாராட்டியும் ஆவன செய்ய அரசினரை கேட்டுக் கொள்ளும் தீர்மானங்களைக் கொண்டு வந்தார். அவை ஏகமனதாக நிறைவேறின. தலைவர் முடிவுரைக்கு பிறகு ராம்தாஸ் நன்றி கூற கூட்டம் முடிந்தது.

# கோத்தமங்கலம் வட்டார விவசாயிகள் சங்க அமைப்பு

பள்ளங்கோவில், ஜூலை 7—
திருத்துறைப்பூண்டி தாலூகாவைச் சேர்ந்த கோத்தமங்கலம் வட்டாரத்தில் 5-ந்தேதி வட்டார விவசாயிகள் சங்கம், விவசாயத் தொழிலாளர் சங்கம் அமைக்கப்பட்டன கிராம முக்கியஸ்தர்கள் 100 பேர் வரை வந்திருந்தனர்.

வட்டார விவசாயத் தொழிலாளர் சங்கச் செயலாளராக எஸ் லட்சுமணன் தேர்ந்தெடுக்கப்பட்டார் துணைச் செயலாளராக வி நாகு ராவும் தலைவராக ஆர். பொன்னுசாமியும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

விவசாயிகள் வட்டார கமிட்டியும் அமைக்கப்பட்டது என். கிருஷ்ணன் தலைவர், கே. அஞ்சான் செயலாளர்; எஸ். அருளாந்து துணைச் செயலாளர்.

# கீழப் பார்த்திபனூர் விவசாயிகள் கோரிக்கை

பரமக்குடி, ஜூலை 13—
கீழப் பார்த்திபனூரில் விவசாயிகள் பொதுக் கூட்டம் ஒன்று, தோழர் மு. ரா. மு. தலைமையில் நடைபெற்றது. அது சமயம், பார்த்திபனூர் கண்மாய் 50 வருட காலமாக மராமத்து செய்யப்படாமலிருப்பதற்கு கண்டனம் தெரிவித்தும்,

கீழப் பார்த்திபனூருக்கு இணைப்பு ரோடு, குடிதண்ணீர், பள்ளிக்கூடம் ஆகியவைகள் ஏற்படுத்திக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

தீர்மானங்கள் பற்றி, தோழர்கள் எம். ஆதிமூலம், எஸ். என். ராமமூர்த்தி, சி திருநாவுக்கரசு, மலைச்சாமி ஆகியோர் பேசினர்.

(க. கி)

# எதிர்க்கட்சியினரின் கிளர்ச்சியால் அபிவிருத்திவேலைகளுக்கு பாதகம்

## கேரள சட்ட அமைச்சர் கண்டனம்

ஹைதராபாத், ஜூலை 14—
கேரளத்தில் எதிர்க்கட்சியினர் துவக்கியுள்ள கிளர்ச்சியால் அபிவிருத்தி வேலைகளின் முன்னேற்றம் பாதிக்கப்பட்டுள்ளது. கிளர்ச்சிக்காரர்கள் எதிர்கால சந்ததிகளை பாதிக்கும் ஒரு கொடிய குற்றத்தை செய்கின்றனரென்று கேரள சட்ட அமைச்சர் திரு. வி. ஆர். கிருஷ்ணய்யர் இங்கு ஒரு பெரிய பொதுக்கூட்டத்தில் பேசுகையில் குறிப்பிட்டார்.

இந்தக் கிளர்ச்சியால் கேரளக் கம்யூனிஸ்ட் கட்சிக்கோ அல்லது கம்யூனிஸ்ட் சர்க்காருக்கோ பாதகமல்ல, ஆனால் பாதிக்கப் படுபவர்கள் பொது மக்கள்தான் என்றும் வி. ஆர். கிருஷ்ணய்யர் குறிப்பிட்டார்.

கல்வி நிலையங்கள் மூன்னும் சர்க்கார் காரியாலயங்கள் முன்னும் எந்தவித மறியல் செய்வதையும் தான் எதிர்ப்பதாகப் பிரதமர் நேரு குறிப்பிட்டார். ஆனால் கேரளக் காங்கிரஸ்காரர்கள் தொடர்ந்து மறியல் செய்து வருகின்றனர். அந்த மறியலும் சமாதானபூர்வமான மறியலும் அல்ல. பொதுஜனங்களுக்குச் சொந்தமான சொத்துக்களெல்லாம் நாசமாக்கப்பட்டு அழிக்கப்படுகின்றன என்றும் கிருஷ்ணய்யர் குறிப்பிட்டார்.

திரு கிருஷ்ணய்யர் மேலும் பேசுகையில், எந்தக் கட்சி ஆட்சிபுரிகிறது என்பது பிரச்சினை அல்ல; ஆனால் நிர்வாகம் தூய்மையானவர்கள் கையில் இருக்கவேண்டும், என்பதுதான் முக்கியமான விஷயம்

கேரளத்தில் ஆபத்து ஏற்பட்டிருப்பது கம்யூனிஸ்ட் கட்சிக்கோ, அல்லது கம்யூனிஸ்ட் சர்க்காருக்குகோ அல்ல; ஆனால் இந்திய அரசியல் சட்டமும், பிரதம மந்திரி நேரு மிகவும் பலமாக வற்புறுத்தும் சமாதான சகவாழ்வுக் கோட்பாடும் தான் ஆபத்துக் குள்ளாகியிருக்கிறது, என்றும் கிருஷ்ணய்யர் கூறினார்.

### சேலம் ஆண்டிபட்டியில் கம்யூனிஸ்ட் கட்சி கிளை அமைப்பு

சேலம், ஜூலை 14—
சேலம் தாலூகா ஆண்டிப்பட்டியில் கம்யூனிஸ்டு அனுதாபிகள் கூட்டம் எஸ். ஐ வஹாப் தலைமையில் நடைபெற்றது. கேரளத்தில் ஜனநாயகத்துக்கெதிரான காங்கிரஸ் சதியை விளக்கி வஹாப் பேசினர்.

பின்னர் கம்யூனிஸ்ட் கட்சிக் கிளை நிறுவப்பட்டது. தோழர் வஹாப் கிளையின் செயலளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்

### தென் ஆப்ரிக்க இந்தியர் பிரச்சினை

### ஐ. நா. வில் விவாதிக்க இந்தியா கோரிக்கை

ஐக்கிய நாடுகள் ஜூலை 14—
தென் ஆப்ரிக்காவிலுள்ள இந்திய வம்சாவழியினரை அந்நாட்டுச் சர்க்கார் பாரபட்சமாக நடத்தும் பிரச்சினையை ஐ நா. பொதுச் சபையின் நிகழ்ச்சி நிரலில் சேர்க்க வேண்டுமென்று இன்று இந்தியா கேட்டுள்ளது

இந்தியாவின் பிரதம பிரதிநிதி சி. எஸ். ஜா, ஐ. நா. பொதுச் செயலாளர் அலுவலகத்திற்குச் சமர்ப்பித்த மகஜரில் இந்தப் பிரச்சினை கடந்த ஆண்டும் விவாதிக்கப்பட்டதென்பதைச் சுட்டிக் காட்டினர்.

தென்னாப்பிரிக்க சர்க்கார் இந்திய சர்க்காரும் பாகிஸ்தான் சர்க்காரும் அனுப்பிய நிருபங்களுக்குப் பதில் அனுப்பாதது குறித்து இந்திய பிரதிநிதி வருத்தம் தெரிவித்தார். —ராய்ட்டர்

### மாஸ்கோவில் வைஜயந்திமாலா

மாஸ்கோ, ஜூலை 12—
இன்று மாஸ்கோ கலை ஊழியர் கழகத்தில் ஜூலை 7-ல், தலைசிறந்த இந்திய நாட்டியக் கலைஞரும் திரைப்பட நடிகையுமான வைஜயந்திமாலா உள்பட 17 இந்தியக் கலைஞர்கள், பல்வேறு இந்திய நடனங்களை ஆடிக் காட்டினர்.

போல்ஷாய் நாடக மன்றத்தின் பாலே நாட்டிய ராணி நிம்மா கரில்ஸ்காயா இந்நடன விருந்துபற்றி டாஸ் நிருபரிடம் பேசுகையில், இந்தியக் கலைஞர்களின் ஆட்டம் தன்னை பரவசமடையச் செய்ததாகக் கூறினர். இந்திய பாணி நடனங்கள் தமக்கே உரித்தான எழிலைப் பெற்றுள்ளன என்றார் அவர்.

இந்தியத் தூதுவராலய அதிகாரிகளும் இந்நிகழ்ச்சியைப் பார்வையிட்டனர்.

### செம்பட்டு

கம்யூனிஸ்ட் கட்சியின் செம்பட்டு கிளை சார்பில் 12-ந் தேதி தோழர் ம. சந்தானம் தலைமையில் பொதுக்கூட்டம் நடந்தது. நியாயவிலைக் கடைகள் திறக்க வேண்டுமென்றும், செம்பட்டியிலுள்ள தோல்ஷாப் முதலாளிகள் தொழிலாளரை நெடுங்காலமாக தினசரிக் கூலிகளாக வைத்து வேலை வாங்குவதைக் கண்டித்தும் கேரள சர்க்காருக்கு ஆதரவு கூறியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

### திருத்தம்

11—7—59ந் தேதி ஜனசக்தி சினிமா பகுதியில் 'சைனா பஜார்' என்ற படத்தைப் பற்றிய செய்தியொன்று வெளியாகி இருந்தது. "ஜிட்டு என்ற சிறுவன் ஒருவனின் உண்மையான கதையே அது" என்றிருப்பதை மாற்றி, "உண்மையான கதையொன்றைத் தழுவித் தயாரிக்கப்படும் அப்படத்தில் ஜிட்டு என்ற சிறுவன் நடிக்கிறான்" என்று திருத்திப் படிக்கும்படி கேட்டுக் கொள்கிறோம். —ஆ.

# புத்தக விமர்சனம்

## Boarding Schools in U.S.S.R.

### (ஹாஸ்டல் வசதியுள்ள பள்ளிகள்)

இந்தியாவிலுள்ள சோவியத் தூதர் அலுவலகத்தின் விளம்பர இலாகா வெளியிட்டுள்ள 'சோவியத் யூனியனில் ஹாஸ்டல் வசதியுள்ள பள்ளிகள், (Boarding Schools in the U S S.R.) என்ற ஆங்கில வெளியீடு வரப்பெற்றோம்.

சோவியத் கல்வி முறை சீர்திருத்தம், புதுமாதிரி பாடசாலைகள், உழைப்பு மூலமும் உழைப்புக்கும் கல்வி முதலிய ஆறு கட்டுரைகள் இந்த வெளியீட்டில் இடம் பெற்றுள்ளன, 24 பக்கங்கள் விலை 10 நயே பைசே

### ரஷ்யாவின் வளர்ச்சி (வரலாற்றுச் சுருக்கம்)

செர்கி அலெக்சியேவ் இயற்றிய ரஷ்யாவின் வளர்ச்சி (வரலாற்றுச் சுருக்கம்) என்ற தமிழ் நூல் வரப்பெற்றோம். இந்தியாவிலுள்ள சோவியத் ஸ்தானிகராலயத்தின் செய்தி இலாகாவால் வெளியிடப்பட்டுள்ள இந்த புத்தகத்தில் மாஸ்கோவில் எழுச்சி, பண்ணையடிமைத்தனத்தின் வீழ்ச்சி, தொழிலாளரின் அரசியல் போராட்டம், போல்ஷ்விக் கட்சி உதயம், ரஷ்ய ஏதேச்சாதிகாரத்தின் வீழ்ச்சி 1917ம் வருஷ பிப்ரவரி புரட்சி, மகத்தான அக்டோபர் சோஷலிஸ்ட் புரட்சி, சோவியத் யூனியனில் சோஷலிஸ நிர்மாணம, யுத்த பிற்கால வருஷங்களில் சோவியத் யூனியன் முதலியன பற்றிய விவரங்கள் தரப்பட்டிருக்கின்றன. 54 பக்கங்கள் விலை 20 நயே பைசே,

### கேரளத்தில் காங்கிரஸ் சதி

கேரளத்தில் காங்கிரஸ் தலைமையில் நடக்கும் "போராட்டத்"தின் தன்மை என்ன? இதற்குப் பொறுப்பாளிகள் யார்? ஏன் இந்த சமயத்தில் இப்போராட்டத்தைத் துவக்கினார்கள்? இதன் விளைவுகளென்ன? இதை அனுமதித்தால் என்ன நேரிடும் என்பதைப் பற்றி விளக்கமாக எழுதியுள்ளார் தோழர் மாஜினி.

தோழர் மணலி கந்தசாமி முகவுரை தந்துள்ளார்.

கிடைக்குமிடம் :
மின்னல் பதிப்பகம்,
33, மியான் சாகிப் தெரு,
சேப்பாக்கம், சென்னை-5.
விலை 4 அணா

# புதுவைமக்கள்நலன்காக்கநல்லாட்சிநிறுவ

## தேர்தல் களத்தில் இறங்கும் மக்கள் முன்னணி அபேட்சகர்கள்

### மார்க்கெட் நிலவரம்

**தங்கம், வெள்ளி**

சென்னை, ஜூலை 15—

| | |
|---|---|
| சவரன் | ரூ. 80-03 |
| தங்கம் (ரெடி) | ரூ. 122-75 |
| ஆபரண தங்கம் | ரூ. 119-75 |
| வெள்ளி 100 தோலா எடை | ரூ. 199-50 |
| வெள்ளி 1 ரூ. எடை | ரூ. 0.03 |

**மணிலா பருப்பு**

681 ராத்தல் கொண்ட பாரம் 1-க்கு விற்பனை வரி உட்பட ரூ. 200-00 முதல் ரூ. 201-00 வரை

**மணிலா எண்ணெய்**

500 ராத்தல் கொண்ட பாரம் 1-க்கு எக்ஸ்பெல்லர் ரெடி மதராஸ் டெலிவரி % F F A (மொத்தவிலை) ரூ. 871-00

**விளக்கெண்ணெய்**

500 ரா. பாரம் 1-க்கு மத (ராக் டெலிவரி) இருப்பத்தூர் ரூ. 335-00
(37½ ரா. டின் 1-க்கு) ரூ. 25-50

**தேங்காய் எண்ணெய்**

(37½ ராத்தல் டின் 1-க்கு விற்பனை வரி உட்பட)
கொல்லம் சரக்கு

| | |
|---|---|
| எம்.எஸ். மார்க்கு | ரூ. 40-00 |
| அம்பு மார்க்கு | ரூ. 38-75 |
| ராஜா மார்க்கு | ரூ. 38-75 |

**சர்க்கரை**

பாரி என் (2 அந்தர்) 114-00

### இன்று அபேட்சாபத்திரம் தாக்கல் செய்தனர்

(டிரங்க்போன் மூலம்)

புதுவை, ஜூலை 15—

புதுவை ராஜ்யத்தில் நடைபெறும் பொதுத் தேர்தலில் மக்கள் முன்னணி அபேட்சகர்களும் அதன் ஆதரவாளர்களும் இன்று தேர்தல் அதிகாரியிடம் தமது அபேட்சா மனுக்களை தாக்கல் செய்தனர். புதுவை நகர அபேட்சகர்கள் விபரம் கீழே தரப்படுகிறது.

பிரெஞ்சு ஏகாதிபத்தியத்தை எதிர்த்து புதுவை ராஜ்ய விடுதலைப் போரில் முன்னின்ற வீரர்களின் பட்டியல் இது. குபேர்காங்கிரசின் ஊழல்களையும் அக்கிரமங்களையும் உறுதியுடன் எதிர்த்து பல இன்னல்களுக்கும் இடையூறுகளுக்கும் இலக்கான வீரர்களின் பட்டியல் இது. தொழிலாளர்கள், விவசாயிகள், மத்திய தர மக்கள், மாணவர்கள், மாதர்கள் இயக்கங்களில் அவர்களது நல்வாழ்க்கைப் போரில் முன்னின்ற வீரர்களின் பட்டியல் இது.

சென்ற பொதுத் தேர்தலில் புதுவையில் மட்டும் மொத்தமுள்ள 22 ஸ்தானங்களில் 19 ஸ்தானங்களில் மக்கள் முன்னணி போட்டியிட்டு 14 ஸ்தானங்களில் வெற்றிபெற்றது.

இந்தத் தேர்தலில் மக்கள் முன்னணி 21 ஸ்தானங்களில் போட்டியிடுகிறது. ஒரு தொகுதியில் ஒரு சுயேச்சையாளரை ஆதரிக்கிறது. ஏனைய பிரதேசங்களான காரைக்கால், மாஹி, ஏனம் ஆகிய பிரதேசங்களில் நமது அபேட்சகர் விபரம் பின்னர் அறிவிக்கப்படும்.

புதுவையில் மக்கள் முன்னணி அபேட்சகர் விபரம்:

1. முருங்கப்பாக்கம்—வி. சுப்பையா (முன்னாள் சட்டசபை உறுப்பினர்-கட்சி உறுப்பினர்), 2. முத்தியால்பேட்டை—டாக்டர் என். ரங்கநாதன் (கட்சி உறுப்பினர் - முன்னாள் சட்டசபை உறுப்பினர்), 3. முசிக்குப்பம்—கிளமன்சோ (முன்னாள் சட்டசபை உறுப்பினர்-கட்சி உறுப்பினர்), 4. காசிக்கடை—சரஸ்வதி சுப்பையா (கட்சி உறுப்பினர்) 5 புசி—எம். எம். ஹூசேன் (முன்னாள் சட்டசபை உறுப்பினர்) 6 உப்பளம்—ஆர். வைத்தியலிங்கம் (முதலியார் பேட்டை முனிசிபல் தலைவர்-கட்சி உறுப்பினர்), 7. புதுச்சேரி—சேதுராமன் (முன்னாள் சட்ட சபை உறுப்பினர்) 8. நெல்லித்தோப்பு—கோவிந்தராஜ நாயக்கர் (புதுவை ராஜ்ய விவசாயசங்கத் தலைவர், முன்னாள் சட்டசபை உறுப்பினர்) 9 அரியாங்குப்பம்—டி. கே ராமானுஜம் (கட்சி உறுப்பினர்) 10. அபிஷேகபாக்கம்-ஏ. தாமோதரன் (கட்சி உறுப்பினர்), 11 குருவிநத்தம்-எம். ராஜகோபால் (கட்சி உறுப்பினர்) 12. பாஹூர்-ராமலிங்கம் (கட்சி உறுப்பினர்) 13. நெட்டப்பாக்கம்-கே. ராமசாமி. 14 ஒம்பலம்-சந்திரசேகர ரெட்டியார் (கட்சி உறுப்பினர்), 15 நெல்லிப்பத்து—எல். நடராஜன் (கட்சி உறுப்பினர்), 16 மண்ணடிப்பேட்டை-ஏ. கிருஷ்ணசாமி, 17. ஊசடு—பக்கிரி முகைதீன் (முன்னாள் சட்டமன்ற உறுப்பினர்) 18. வில்லியனூர்—சிதம்பரம் (கட்சி உறுப்பினர்) 19. காலாப்பட்டு-எஸ் சிவஞானம், 20. ரெட்டியார் பாளையம்-நாராயணசாமி (ஒழுகரை முனிசிபல் தலைவர்—கட்சி உறுப்பினர்—முன்னாள் சட்ட மன்ற உறுப்பினர்), 21. உழவர்கரை—என். குருசாமி (கட்சி உறுப்பினர்—புதுவை ராஜ்ய விவசாய சங்கக் காரியதரிசி), 22. சாரம்—பி. நாராயணசாமி (கட்சி உறுப்பினர்).

### பட்டத்தின் பத்திரிகாலயத்தில் போலீஸ் சோதனை

திருவனந்தபுரம், ஜூலை 14—

பி சோ. தலைவர் பட்டம் தாணுப் பிள்ளையால் நடத்தப்படும் கேரள ஜனதா என்ற மலையாள பத்திரிகையின் காரியாலயத்தைப் போலீஸார் இன்று சோதனை இட்டனர்.

திருவாங்கூர்—கொச்சி பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் பதிவு செய்யப்பட்ட ஒரு வழக்கை ஒட்டியே இந்த சோதனை நடைபெற்றது.

ஆயுத போலீஸார் முகாமில் போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஆற்றிய சொற்பொழிவு என்ற தலைப்பில் அந்தப் பத்திரிகையில் ஜூன் 5-ம் தேதி வெளி வந்துள்ள ஒரு செய்தியின் கைப்பிரதி கைப்பற்றப் பட்டது.

### ஆச்சார்ய வினோபாபாவே

ஸ்ரீநகர், ஜூலை 15—

ஆச்சார்ய வினோபாபாவே பீர் பஞ்சால் மலையைக் கடந்து இன்று குல்மார்க் வந்து சேருவார்.

### ரெயில்வே போர்டுக்கு மேலும் 5 கோடி டாலர் கடன்

#### உலக பாங்கியுடன் ஒப்பந்தம்

புதுடில்லி, ஜூலை 14—

இந்திய ரெயில்வே போர்டைச் சேர்ந்த இரண்டு அதிகாரிகள் நாளை வாஷிங்டனில் உலக பாங்கியுடன் 5 கோடி டாலர் கடன் தொகை ஒப்பந்தத்தில் கையெழுத்திடுவார்கள்.

இந்தக் கடன் தொகை பெறுவதற்கான பேச்சு வார்த்தை ஜூன் 22-ம் தேதி ஆரம்பமாயிற்று. ரெயில்வே போர்டு உறுப்பினர்கள். திரு. கே. பி மாத்தூர், திரு. ஜே தயாள் ஆகியவர்கள் இந்தப் பேச்சு வார்த்தையில் கலந்து கொண்டார்கள்.



## இராக் குடியரசின் முதலாவது ஆண்டுவிழா

### ரஷ்ய ஆயுதங்களும் ஜெட் விமானங்களும் அணிவகுப்பில் சென்றன

பாக்தாத், ஜூலை 14—

ஏகாதிபத்தியங்களின் கையாளாக இராக்கை ஆண்டு வந்த பைசல் மன்னனையும், மந்திரி நூரியையும் இராக் மக்கள் தூக்கியெறிந்துவிட்டு குடியரசு அமைத்த முதலாண்டு விழாவை இராக் தேசம் வெகு உற்சாகமாக கொண்டாடுகிறது. இராக்கின் தலைநகரான பாக்தாத் நகரில் இராக் குடியரசின் சக்தி எத்தகையது என்பதை அறிவிக்கும் படை வீரர்களின் அற்புத அணிவகுப்பு ஒன்று நடந்தது.

**மக்கள் ஆரவாரம்**

ரஷ்ய நவீன ஆயுதங்களும், டாங்கிகளும், ஜெட் விமானங்களும் அந்த அணி வகுப்பில் எடுத்துச் செல்லப்பட்டன. பிரிட்டனிடமிருந்து வாங்கப்பட்ட விமானங்களும் அணி வகுப்பில் கலந்து கொண்டன.

அணிவகுப்பின் முகப்பில் ரஷ்ய இரும்புக் கவச வண்டியில் இராக் கொடிகள் எடுத்துச் செல்லப்பட்டன. தெருக்களின் இரு மருங்கிலும் கூடியிருந்த மக்கள் கூடி, "குடியரசு தலைவர் அப்துல் கரீம் வாழ்க!" என்று கோஷித்தார்கள்.

**பிரிட்டிஷ் வண்டிகள் மீது ரஷ்ய பீரங்கிகள்**

பிறகு ரஷிய கவச மோட்டார்களில் பத்துப் பத்து சிப்பாய்கள் வீதம் ஏறிக்கொண்டு வந்தார்கள். உள்நாட்டுப் பாதுகாப்புப் படையில் சேர்ந்துள்ள ஏராளமான பெண்களும் கவச மோட்டார்களில் வந்தார்கள். பிரிட்டிஷ் வண்டிகள் மீது ரஷ்ய பீரங்கிகள் ஏற்றப்பட்டு கம்பீரமாக பவனி வந்தன. சாதாரண மக்கள் ரஷ்ய ஆயுதங்களையும் வண்டி வாகனங்களையும் மேற்கத்திய ஆயுதங்களையும் வண்டிகளையும் சுலபமாகப் புரிந்து கொள்ளுகிறார்கள். ரஷ்யர்களுடைய வண்டிகள் பச்சை வர்ணம் பூசப்பட்டவை. மேற்கு நாட்டவரின் வண்டிகள் மணல் நிறத்தவை.

## அ. இ. பஞ்சாலைத் தொழிலாளர் மாநாடு ஒத்திவைப்பு

சென்னை, ஜூலை 15—

பம்பாயில் ஜூலை 21, 22 தேதிகளில் நடக்கவிருந்த அ. இ. பஞ்சாலைத் தொழிலாளர் மாநாடு ஒத்தி வைக்கப்பட்டுள்ளது. நடக்கும் தேதி பிறகு அறிவிக்கப்படும் என்று ஏ. ஐ. டி. யு. சியிலிருந்து தகவல் வந்துள்ளது.

டி. ஆர். கணேசன்

## சோவியத் பிரதமர் போலந்திற்கு விஜயம்

வார்சா, ஜூலை 14—

சோவியத் பிரதமர் குருஷ்சேவ் இன்று இங்கு வந்து சேர்ந்தார். சோவியத் பிரதமர் தலைமையில் முக்கிய சர்க்கார் அதிகாரிகளும், கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர்களும் அடங்கிய ஒரு நல்லெண்ண தூதுக்குழுவும் இங்கு வந்துள்ளது இவர்கள் 10 நாட்கள் போலந்தில் தங்குவர்.

போலந்து கம்யூனிஸ்ட் கட்சி தலைவர் கோமுல்கா இவர்களை வரவேற்றுப் பேசுகையில், இரண்டு ஜெர்மன் நாடுகளும் கலந்து கொண்டு ஜெர்மன் பிரச்சினையில் ஒரு சமாதானபூர்வமான முடிவு ஏற்பட வேண்டுமென்று போலந்து விரும்புகிறது என்றார்.

வரவேற்புக்குப் பதிலளிக்கையில் தனது வருகை இரண்டு நாடுகளுடைய நட்புறவை மேலும் பலப்படுத்தும் என்று சோவியத் பிரதமர் குருஷ்சேவ் கூறினார்.

## எல்லாப் பேச்சு வார்த்தையிலும் இரண்டு ஜெர்மன் தேசங்களும் கலந்துகொள்ள .வேண்டும்

### சோவியத் யூனியன் வற்புறுத்துகிறது

ஜெனிவா, ஜூலை 13—

கிழக்கு மேற்கு ஜெர்மன் பேச்சுவார்த்தையில் கிழக்கு மேற்கு ஜெர்மன் தேசங்கள் கலந்துகொள்ள வேண்டும். அதிகாரப் பூர்வமான பேச்சு வார்த்தையானாலும் சரி, அதிகாரப் பூர்வமற்ற பேச்சு வார்த்தையானாலும் சரி எல்லாப் பேச்சு வார்த்தைகளிலும் இரண்டு தேசங்களும் கலந்து கொள்ள வேண்டும் என ரஷ்யா வற்புறுத்துகிறது என்று சோவியத் அதிகாரி ஒருவர் கூறினார்.

சோவியத் யூனியன் இந்தப் பிரச்சினையை வலியுறுத்தியுள்ளது என்று அவர் குறிப்பிட்டார்.

### வெள்ளச் சேதப் பகுதிகளை இலவச ரேஷன் பிரதேசங்களாக அறிவிக்கவும் ஜி. எம். சாதிக் வேண்டுகோள்

ஸ்ரீநகர், ஜூலை 14—

காஷ்மீர் பள்ளத்தாக்கில் பாதிக்கப்பட்டுள்ள பிரதேசங்களை இன்னும் மூன்று மாதங்களுக்காவது இலவச ரேஷன் பிரதேசமாக அரசாங்கம் அறிவிக்க வேண்டுமென ஜனநாயக தேசிய மாநாட்டின் தலைவர் ஜி. எம் சாதிக் இங்கு நிருபர்களிடம் அறிவித்தார்.

அனந்தநாக் ஜில்லாவில் 20 சதவீதத்திற்கு அதிகமான பயிர்கள் நாசமடைந்துள்ளன எனவும் இதர பகுதிகளில் ஏற்பட்ட சேத விபரத்தை மதிப்பிட முடியவில்லை எனவும் ஏனெனில் இப்பிரதேசங்களில் இன்னும் நீர் வடியவில்லை என்றும் அவர் கூறினர்.

### பள்ளிக்கூடத்திற்குள் புகுந்து மாணவர்களை விரட்டினர்

#### பி.சோ. கட்சியைச் சேர்ந்த காலிகளின் மிருகத்தனம்

திருவனந்தபுரம், ஜூலை 14—

இன்று திருவனந்தபுரம் ஜில்லாவில் மலயிங்கில் என்ற இடத்திலுள்ள ஒரு பள்ளிக்கூடத்திற்குள் காலிகளின் கும்பல் ஒன்றுபுகுந்து அங்குள்ள மாணவர்களை வெளியே விரட்டினர். கம்யூனிஸ்ட் சர்க்கார்-எதிர்ப்புக் கிளர்ச்சியைச் சேர்ந்த காலிகளின் இந்த மிருகத்தனமான நடவடிக்கையினால் மூன்று மாணவர்கள் காயமடைந்தனர். இந்தக் காலிகள் கூட்டத்தில் இருந்தவர்களில் பெரும்பாலோர் பிரஜா-சோஷலிஸ்ட் கட்சியைச் சேர்ந்தவர்கள் என்று சர்க்கார் அறிக்கை கூறுகிறது. அவர்கள் பள்ளிக்கூடத்தின் நாற்காலி, மேஜை, பெஞ்சுகளையும் உடைத்து நாசப்படுத்தினர்.

**மற்றொரு சம்பவம்**

நேற்றிரவு கண்ணனூர் ஜில்லாவில் சோக்னி என்ற இடத்திலுள்ள ராமவிலாஸ் உயர்நிலைப்பள்ளியிலும் சிலகாலிகள் (மாணவர்கள் என்று கூறப்படுகிறது) புகுந்து பள்ளிக்கூடக் கட்டிடத்திற்கும், மரச்சாமான்களுக்கும் சேதம் விளைத்தனர் என்றும் சர்க்கார் அறிக்கை கூறுகிறது.

## பதவிக்காலம் முடிவடையுமுன் மெஜாரிடிக் கட்சி ராஜினமா செய்வது எங்கும் நிகழ்ந்ததில்லை

### ஆலப்புழை கூட்டத்தில் பவானிசென்

ஆலப்புழை, ஜூலை 14—

கேரள சர்க்கார் ராஜினமா செய்யப் போவதில்லை. ஏனெனில் அவ்வாறு ராஜினமா செய்வதற்கான நிலைமை ஒன்றும் கேரளத்தில் ஏற்பட்டுவிடவில்லை என்று இங்கு கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் நடைபெற்ற பெரியதோர் பொதுக்கூட்டத்தில் பேசுகையில் அ. இ. விவசாயிகள் சங்கத்தின் பொதுக்காரியதரிசி தோழர் பவானிசென், குறிப்பிட்டார் பார்லிமெண்டரி ஜனநாயகத்தின் கீழ் உள்ள எந்த நாட்டிலும் மெஜாரிடி பலமுள்ள ஒரு ஆளுங்கட்சி, அரசியல் சட்டத்தின் படியுள்ள முழுப்பதவிக் காலமும் முடிவடைவதற்கு முன் பதவியைவிட்டு வெளியேறிய முன்னுதாரணம் கிடையாது, என்றும் பவானி சென் குறிப்பிட்டார்.

தற்பொழுது கேரளத்தில் ஜனாதிபதியின் தலையீடு ஏற்படுமேயானால், அதனால் நிலைமை மோசமாகும்.

மத்திய சர்க்காரிலும், இதர எல்லா ராஜ்யங்களிலும் பதவியிலுள்ள காங்கிரஸ் ஸ்தாபனத்திற்கு மிகவும் பாதகமாக முடியும். மேலும் அது இந்தியாவில் பார்லிமெண்டரி ஜனநாயக அமைப்பின் அடிகதளத்திற்கே வேட்டுவைப்பதாகும், என்றும் பவானி சென் குறிப்பிட்டார்.

கூட்டத்திற்கு முன்பு எதிர்க்கட்சியினர் கிளர்ச்சியைக் கண்டித்தும், கேரள சர்க்காருக்கு ஆதரவு தெரிவித்தும் கோஷங்களை முழக்கிக்கொண்டு ஒரு பெரிய ஊர்வலம் நடைபெற்றது.

### அல்ஜீரிய பிரச்சினை

#### ஐ. நா. வில் விவாதத்திற்கு முயற்சி

ஐக்கியநாடுகள், ஜூலை 14—

ஐ. நா. பொதுச்சபையின் அடுத்த கூட்ட நிகழ்ச்சி நிரலில் அல்ஜீரிய பிரச்சினை சேர்க்கப்படவேண்டுமென்று இந்தியா உள்பட 25 ஆசிய, ஆப்ரிக்க நாடுகள் இன்று வேண்டுகோள் அனுப்பியுள்ளன.

இந்த வேண்டுகோள் அடங்கிய கடிதமொன்று இன்று ஐ. நா. பொதுச் செயலாளர் அலுவலகத்திற்கு அனுப்பப்பட்டது. 25 ஆசிய, ஆப்ரிக்க நாடுகளும் அதில் கையொப்பமிட்டுள்ளன.

ஆசிய, ஆப்ரிக்க நாடுகள் கோஷ்டியின் அக்ராசனராக ஜார்ஜென் ஹக்கீம் (லெபனன்) அக்கடிதத்தை ஐ நா. காரியாலயத்தில் கொண்டுபோய் கொடுத்தார்.

இந்தக் கடிதத்தில் லாவோஸ், கம்போடியா, தாய்லந்து, துருக்கி ஆகிய நான்கு நாடுகள் கையொப்பமிடவில்லை.

### வெள்ளத்தில் 100 பேருக்குமேல் பலி

#### மே. பாகிஸ்தானில் 400 வீடுகள் நாசம்

லாகூர், ஜூலை 14—

மேற்கு பாகிஸ்தானில் கடந்த 15 நாட்களாக ஏற்பட்டுள்ள வெள்ளத்தால் 100 பேருக்குமேல் மாண்டனர்.

ரவி, செனாப், ஜீலம் முதலிய நதிகளில் வெள்ளப் பிரவாகம் குறைந்து வருகிறது

வெள்ளத்தில் 4000 வீடுகள் நாசமாயின. 10,000-க்கு மேற்பட்ட வீடுகள் சேதமாயின. 6000 கால்நடைகள் காணாமற் போயின. சாகுபடியான 1½ லட்சம் ஏக்கர் நிலம் நாசமடைந்தது

—ராய்ட்டர்

### நூலக இயல் பரீட்சை முடிவு

சென்னை, ஜூலை 15—

The following is THE PROVISIONAL LIST of Register Numbers of successful candidates at the Certificate in Librarianship Examination held in June 1959:

Register Numbers: 1 to 15, 17 and 19 to 25.

## மறுதேர்தல் பற்றி இ. எம். எஸ். பேசவில்லை

### பத்திரிகைகளின் சரடுகளுக்கு பி. ராமமூர்த்தி மறுப்பு

திருவனந்தபுரம், ஜூலை 14—

கம்யூனிஸ்ட் கட்சியின் மத்திய நிர்வாகக் குழு உறுப்பினர் தோழர் பி. ராமமூர்த்தி இன்று பத்திரிகை நிருபர்கள் மத்தியில் சிம்லாவிலும், டில்லியிலும் கேரள முதலமைச்சர் இ. எம். எஸ். நம்பூதிரிப்பாட் நடத்திய பேச்சுவார்த்தை பற்றி குறிப்பிட்டார். அதில் "காங்கிரஸ்காரர்கள் தங்கள் கிளர்ச்சியை நிறுத்தி வைத்தார்களென்றால், இடைக்காலத் தேர்தலுக்கு இ எம். எஸ். இணக்கம் தெரிவித்துள்ளதாக ஒரு சில பத்திரிகைகள் செய்தி வெளியிட்டிருந்தது தவறானது என்றார்.

நேற்று தேசிய கவுன்சில் கூட்டத்தில் கேரள முதலமைச்சர் தான் டெல்லியிலும், சிம்லாவில் நடத்திய பேச்சுவார்த்தை பற்றி விளக்கிக்கூறிய போது ஆறு மாத காலத்திற்குள் இடைக்கால தேர்தல் நடத்தும் பேச்சே வரவில்லை, எனவே அந்தப் பிரச்சினை பற்றி விவாதிப்பதற்கே இல்லை என்றார்.

ராமமூர்த்தி மேலும் கூறுகையில் காங்கிரஸ் தலைமை இப்படிப்பட்ட மறியலையும், சட்ட விரோதமான நடவடிக்கைகளையும் அங்கீகரிக்கப் போவதில்லை என்று சொன்னதே தவிர, இதுவரையில் வெளிப்படையாக இந்த சட்டவிரோத நடவடிக்கைகளைக் கண்டிக்க முன்வரவில்லை. எனவே, காங்கிரஸ் கட்சியின் இந்தப் போக்கை எதிர்த்து பொதுஜன அபிப்பிராயத்தை எப்படி உருவாக்குவது என்பது பற்றி தேசிய கவுன்சில் பரிசீலனை செய்யும்" என்றார்.

இந்த மறியல்கள், சட்டவிரோத நடவடிக்கைகள் ஆகியவற்றில் கேரள காங்கிரஸ் தலைவர்கள் முழுக்க முழுக்க ஈடுபட்டுள்ளார்கள். அவர்களை தலைமை இதுவரையில் கண்டிக்கவில்லை.

காங்கிரஸ் கட்சி ஜனநாயக முறைகளைக் கடைப் பிடிக்க வேண்டும், அல்லது, கேரள தலைமை மீது கட்டுப்பாட்டையும் ஒழுங்கையும் நிலைநாட்ட முடியவில்லையென்று காங்கிரஸ் தலைமை ஒப்புகொண்டாகவேண்டும். காங்கிரஸ் தலைமை இரண்டு முறைகளையும் ஒரே நேரத்தில கைகொள்ள முடியாது.

இப்போது ஏற்பட்டுள்ள கிளர்ச்சியில் கேரள பிரதேச காங்கிரஸ் நிலைமைதான் என்ன என்பது பற்றி காங்கிரஸ் கட்சி தலைமைப் பீடம் ஒரு திட்டவட்டமான முடிவை எடுத்தாக வேண்டும். எனவே, காங்கிரஸ் கட்சியை இந்த ஒரு திட்டவட்டமான முடிவுக்கு வரவற்புறுத்த நாட்டில் பொதுஜன அபிப்பிராயத்தை எவ்வாறு திரட்டுவது என்பதுபற்றி தேசிய கவுன்சில் விவாதிக்கும் என்றார்.

### சென்னை அரசாங்க வக்கீல்கள் மகாநாடு

கோயம்புத்தூர், ஜூலை 14—

சென்னை அரசாங்க வக்கீல்கள், உதவி வக்கீல்கள் மகாநாடு ஒன்று ஜூலை 18-ம் தேதி திருச்சிராப்பள்ளியில் நடைபெறும்.

திருச்சி ஜில்லா நீதிபதி திரு. சிவசுப்ரமண்ய நாடார் மகாநாட்டைத் தொடங்கி வைப்பார்.

## காங்கிரசை விட்டு வெளியேறிய புதுவை வாலிபர்கள்

### கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந்தனர்

புதுவை, ஜூலை 13—

தோழர்கள் ஆர். ரங்கராஜன், ஆர் கணேசன், மு லட்சுமி நாராயணன், ப. அங்கமுத்து, அ. பொன்னுரங்கம், செல்வராசு, கே. மணி, என். மன்னாதன், ஷ. ஆயுதபாணி, ந. ஆதிமூலம், அ. வேணு, வி. ராமசாமி, கே. ராமக்கவுண்டன், எம். கிருஷ்ணன், வ. ராசு ஆகியோர் பின்வருமாறு அறிவிக்கின்றனர்:—

நாங்கள் புதுவை முத்தியால்பேட்டை மஞ்சினி நாயகர் குப்பத்தில் குடியிருக்கும் வாலிபர்கள். நாங்கள் அனைவரும் பல நாட்களாக காங்கிரஸ் கட்சியில் சேர்ந்து சேவைசெய்துவந்தோம். ஆயினும் சில நாட்களாக காங்கிரஸ் கட்சியில் சுயநலக்காரர்களும் பதவிவேட்டைக்காரர்களும் அதிகமாகக் குடியேறிவிட்டார்கள். அண்ணல் காந்தி அடிகளின் கண்ணியத்தை மண்ணில் புதைத்து விட்டார்கள். ஆகவே பிற்போக்குக் கொள்கைகளைக் கடைப்பிடித்துச் செல்லும் காங்கிரஸை விட்டு விலகி, உழைக்கும் வர்க்கத்தின் உத்தம நண்பனாக அல்லும் பகலும் இடைவிடாது சேவை செய்யும் கம்யூனிஸ்ட் கட்சியின் கீழ் இன்று முதல் சேவை செய்யப் போகிறோம் என்பதை இந்த அறிக்கையின் வாயிலாக அனைவருக்கும் தெரிவித்துக் கொள்கிறோம்.

### இ. எம். எஸ். கவர்னர் சந்திப்பு

திருவனந்தபுரம், ஜூலை 14—

முதல் அமைச்சர் இ எம்.எஸ், நம்பூதிரிபாட் இன்று மாலை கவர்னர் டாக்டர் பி. ராமகிருஷ்ணராவைச் சந்தித்து, ராஜ்ய நிலவரம் பற்றி பேசினார்.

## நடக்கஇருப்பவை

**ஊர்வலம், பொதுக்கூட்டம்**

16-7-59 புதன்கிழமை மாலை 5 மணிக்கு சென்னை ஸைதாப்பேட்டை கைத்தறி நெசவுத் தொழிலாளர் சங்கத்தின் சார்பாக திரு. எஸ். கிருஷ்ணமூர்த்தி பி. ஏ., பி.எல். நகராண்மைக் கழக உறுப்பினர் தலைமையில், குறைந்த கூலி கொடுப்பதைக் கண்டித்து ஊர்வலமும், பொதுக் கூட்டமும் நடைபெறும்.

வர்த்தக ஊழியர் சங்க ஆண்டு விழா: இடம் கோகலே மண்டபம். நேரம் மாலை 6 மணி. தலைவர் வி. ஜி. ராவ், பேச்சாளர்கள்: திரு. மோஹன் குமாரமங்கலம், திரு. ஆர். வி. கிருஷ்ணமூர்த்தி.

## வானொலி

### சென்னை-1

17—7—59

**காலை முதல் ஒலிபரப்பு**

6-55 மங்கள இசை 7-00 துதிப்பாடல்கள் 7-10 நிகழ்ச்சிக் குறிப்புகள், வானிலை அறிவிப்பு 7-15 தமிழில் செய்தி 7-30 அமூர் எஸ். ஜயராமன் நாதஸ்வரம் 8-00 மதுர கீதம், 8-15 ஒலிபரப்பு முடிவு.

**இரண்டாவது ஒலிபரப்பு**

1-00 மாதர் நிகழ்ச்சி 1-30 கானமஞ்சரி, 1-40 ஹிந்தியில் செய்தி, 1-50 இசைச் செண்டு, 2-00 தமிழில் செய்தி, 2-10 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு.

**மாலை மூன்றாவது ஒலிபரப்பு**

5-30 முக வீணை ஆ. இ. ரே. வித்வான் 5.45 காந்தி சர்ச்சை 6-00 பஜனை 6-05 பிராந்தியச் செய்திகள் 6-15 மொஹரம் பேச்சு 6-30 கிராம நிகழ்ச்சிகள், (திருச்சி அஞ்சல்) 7-15 தமிழில் செய்தி, 7-30 தவாரம் வெங்கடசாமி நாயுடு, மாரெல்ல கேசவ ராவ் இரு வயலின்கள் 9-00 கதம்பம் 9-15 வாத்ய கோஷ்டி 9-30 மெல்லிசை மெட்டுகள் 9-45 இசை அமுதம், 10-30 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு.

### திருச்சி

17—7—59

**காலை முதல் ஒலிபரப்பு**

7-00 இசைக் கதிர் துதிப் பாடல்கள் 7-10 நிகழ்ச்சிக் குறிப்புகள் 7-15 தமிழில் செய்தி 7-30 அமூர் எஸ். ஜெயராமன் நாதஸ்வரம் 8-00 ஆங்கிலத்தில் செய்தி 8-15 ஒலிபரப்பு முடிவு.

**இரண்டாவது ஒலிபரப்பு**

1-00 மாதர் நிகழ்ச்சி 1-30 வீணை (இசைத்தட்டு) 1-40 ஹிந்தியில் செய்தி, 1-50 குரல் இசை 2-00 தமிழில் செய்தி, 2-10 இடை வேளை 2-15 துதிப்பாடல்கள் 2-45 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு.

**மாலை மூன்றாவது ஒலிபரப்பு**

4-45 விவித பாரதி, கர்நாடக சங்கீதநிகழ்ச்சி (பம்பாய் அஞ்சல்) 5-45 காந்தி நினைவுரை 6-00 அறிவிப்புகள், 6-05 பிராந்திய செய்திகள், 6-15 மொஹரம் மௌல்வி ஆதம் சாகிப் பேச்சு 6-30 கிராம நிகழ்ச்சிகள் 7-15 தமிழில் செய்தி 7-30 த்வாரம் வெங்கடசாமி நாயுடு, மாரெல்ல கேசவ ராவ் இரு வயலின்கள், கே. வெங்கடராஜு மிருதங்கம் 9-00 ஆங்கிலத்தில் செய்தி 9-15 கண்மணி மாலை இசைச் சித்திரம் 9-30 மெல்லிசை 9-45 எம். எஸ். சுப்புலட்சுமி 10-00 ஒலிபரப்பு முடிவு.

ஜனசக்தி அச்சகத்தில் அச்சிட்டு வெளியிட்டவர் எஸ். கிருஷ்ண... ஆசிரியர்: ப. ஜீவானந்தம். முகவரி: 87, பிராட்வே சென்னை
Janasakthi
Broadway Madras-1